உ

# வேதசிரோணி

# சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்த

தண்டபாணிபேரில்பதிகமும்.

# உபதேசவுண்மையும்

உபதேசவுண்மைக்கட்டளையும்,

தோத்திரமாலையும்,

இஃது

ம-ா-ா-ஸ்ரீ

ம - வேங்கிட கிருஷ்ண பிள்ளை

தி - சோமசுந்தரக் கவிராயர்

௫௧- வது பட்டாளம்சுபைதார்மேஜர்சிதம்பரம்பிள்ளை

உ௬-வது, பட்டாளம்ஜமேதார் மதுரைமுத்துபிள்ளை

௩௬-வது, பட்டாளம் வக்கீல்நாராயணசாமிநாயகர்

டில்லெரி பார்தர்சுபைதார் சங்காசிநாயகர்

இவர்கள்கேட்டுக்கொண்டபடி

சிதம்பரம்,

சிவபாதம்பிள்ளையின்மாணாக்கராகிய

## சிங்காரவேலுபிள்ளை

அவர்களால்

பார்வையிடப்பட்டு

சென்னை கொண்ணூர்,

## மாணிக்கமுதலியார்

கம்பேனியாரவர்களால்

தமது

மனோன்மணிவிலாசவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விஷு ௵ சி[illegible]மீ

# புத்தகவிளம்பரம்

இதனால் யாவருக்குந் தெரிவிப்பதுயாதெனில் சென்னைப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை சேர்காரன்கடைக்கடுத்த நட்டுப்பிள்ளையார் கோயிலுக்கருகில் பிரங்கப்பட்டணம் சுப்பிரமணியமுதலியார்தெருவில் கிழக்கண்டைவாடை (௨௮) வது, கதவிலக்கமுள்ள வீட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மனோன்மணி விலாசமென்னும் அச்சுக்கூடத்தில் பதிப்பித்திருக்கின்ற புத்தகங்களாவன.

அகஸ்தியர்தேவாரத்திரட்டு, திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு. பெரியபுராணச் செய்யுட்டிரட்டு இவைகளடங்கிய;

அருட்பா (ஸ்

கடஸ்கந்தமாகியபாகவதவசனம்சித்திரப்படங்களுடன்

விசேஷமாக அனேகங்கதைகளும் விருத்தங்களுஞ்

சேர்ந்தபாரதம் வாலம்காலுகூடிய புத்தகம்

பெரியபுராணம் பாட்டு

காளத்திபுராணம்

ருக்குமாங்கதவிலாசம்

ஸ்ரீகிருஷ்ணவிலாசம்

பார்த்தசாரதிமாலை

கந்தாந்தாதியுரை

குசலவநாடகம்

மன்மதநாடகம்

சகஸ்திரமுகராவணன்கதை

பத்திராசலராமதாசுகீர்த்தனை

சாரங்கதரன்கதை

சானந்தகணேசர்புராணம்

ஞானவாசிஷ்டவசனம்

இரங்கேசவெண்பா மூலமும்உரையும்

ஜோகிநாடகம்

சிதம்பரபுராணமூலமும்உரையும்

பெரிசி-சின்னசாமிகீர்த்தனை

சுப்பராமஐயர்பதம்

பிரகலாதனவிலாசம்

கந்தபுராணச்சுருக்கம்

இன்னும்பலவித தமிழ்தெலுங்குமுதலிய வயித்தியசாஸ்திரங்களும், விலைசரசமாக விற்பனைசெய்துவருவதால் வேண்டுபவர்கள்மேற்கண்டவிடத்தில் விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

ஆசிரியப்பா.

அருமறையந்தமு மாகமாதிகளும்
தெரிவரும்பரமாய்ச் சத்தாய்ச்சித்தாய்
ஆனந்தமாகி யகண்டாகாரமாய்
தானந்தமில்லாத் தத்துவமுடிவாய்
நித்தமாய்ச்சுத்தமாய் நிருமலவடிவாய்
புத்தமாய்முத்தமாய்ப் பூரணவொளிவாய்
சாக்ஷாத்காரந் தருபரம்பொருளாய்
மோக்ஷாதிக்ய முதலாய்முதலீ
றில்லாவொன்று மென்றுமோரியல்பாய்
நல்லாருளத்தி னண்ணுநிக்ஷேபமாய்
அடியவர்க்கென்று மருளாயருளில்
கொடியவர்க்கென்றுங் குறித்திடாவிருளாய்
சகலவுயிர்தோறுஞ் சகலவிடந்தோறும்
புகவொருதன்மையாப் பொருந்தியசிவமே
மன்னுயிர்க்கிரங்கி மனிதவடிவுகொண்
டிந்நிலத்தெய்திட தெனைப்பழமலையில்வந்
தன்னையார் பெரியநாயகியருளாலே
முன்னுறவருளமு துண்டுமூவாது
உரியஞானப்பொரு,ளுணராதுணர்ந்து
தரணியிலெவர்களுந் தாமனுபவித்த
சம்ரசமௌன சதானந்தவாழ்வை
அமையொருகணத்தறிந் தளவில்வீட்டின்பம்

எளிதினிற்பெறவுளத் தெண்ணியெண்ணியண்டாம்
தெளிவுறுசாத்திரத் திருவாய்மலர்ந்தருள்
லக்கோக்குமர குருபரனிணையடிப்
பங்கயச்செழுந்தேன் பதைப்பறவுண்டு
மும்மலப்பகையோரீஇ முத்திநகர்க்கோர்
அமலவேந்தாகி யரசவீற்றிருக்கும்
அடியவர்க்கடியா ரடியிணைமருமலர்
முடிமிசைதரித்திடு மூர்த்திமாதவக்
குழந்தைவேலென்னுங் குருபரனருளால்
அழுந்துமஞ்ஞான வகந்தையைமாய்த்து
ஞானமாமணியை நண்பினிற்கைக்கொண்
டனமாமோக விருளறுகாவலை
இல்லறநீங்கிமேலின்புறுதுறவெனும்
நல்லறங்கையுறீ இநற்குருலிங்க
ஜங்கமமெனச்சொலுந் தக்கமூன்றுருவையும்
துங்கமாய்ப்பணிந்து தொழுமறிவாளன்
வேதசிரோமணி விமலன்சிவாலயத்
தோதுந்திருப்பணி யுள்ளனவெலாம்பர
பத்தியாற்செய்துயர் பஞ்சபர்வத்துடன்
நித்தியவிழாக்க ணெடிதுறப்புரிந்து
பிரமோச்சவமுதற் பெருவிழாவென்றும்
திரமாய்நிகழ்வுறச்செய்வித்ததுமலால்
தண்டபாணியனார் தனித்தேர்த்திருப்பணி
மண்டலமுழுது மதித்திடச்செய்வோன்
திடமுறவினும்பல சிவாலயப்பணியும்
மடமறச்செய்தருள் வள்ளல்மனப்பகை
வீட்டிமெய்ப்போதக னாகிமெய்யடியவர்
ஈட்டும்பவப்பிணி யெலாமொருநொடியில்
போக்குஞ்சிதம்பரப் புண்ணியனுயிர்த்தோனை க

# சிறப்புப்பாயிரம்.

தாக்கும்பவப்பெருஞ் சாகரந்தாண்டியம்
முத்தியங்கரையிடை முற்றிமா மகிழ்வுறச்
சத்தியமாகத் தனதகங்கருதியோ
அறிவறிந்தேயோ வறிவறியாமலோ
பிறிவறிந்தேயோ பிறிவறியாமலோ
அன்பினாலேயோ அன்பறின்றியோ
வன்பினாலேயோ வன்பறின்றியோ
இலக்கியமிலக்கண மெனுமிருவகையின்
துலக்கமதுணர்கிலாத் தோன்றலாகியும்
முற்பவந்தன்னின் முதிர்வுறப்பயின்ற
நற்றவப்பேற்றா னவிலுபதேச
உண்மையுமதன்கட் டளையுமுகந்துரைத்
தெண்மைதீர்தோத்திர மாலையுமியற்றினன்
கருத்துறுமிவற்றினைக் கலியுகநாலா
யிரத்துத்தொளாயிரத் தெண்பத்திரண்டில்
பிரப்வாதிபதினான்கின்மேற்பெருமை
மருவுவிஷுவெனும்வருடமேடத்தில்
மநோலயமில்லா வமலர்க்குமுத்தியாய்
மநோன்மணிவிலாச மென்னுமேதினியில்
தழைவுறுமச்சுக் கூடந்தன்னில்
எழுநாவெழுத்தி லிசைவித்தளித்தனன்
வரிவளையினங்கள் வயிறுளைந்தீன்ற
பெருகொளிமுத்தைப் பெருங்கருவென்று
குருகடைகிடக்குங் குளிர்வயலெங்கும்
திண்ணமாயிருக்குந் திறல்மிகுவேலன்
கொண்ணூர்பதியினிற் குலவிவாழ்ந்திடுவோன்
மாணிக்கமுதலி மகிபதியாளன்
பூணிக்கையாகப்புவியிலச்சிட்டனனே,

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

வேதசிரோணி.

# தண்டபாணிபேரில் பதிகம்.

(*)

(காப்பு - கணபதிதுதி)

ஆனைமுகத்தனை - ஞானமனத்தொடு
நானுனவிட்டிடும் - ஈனமனைத்துமே.

பதிகம்.

கங்கைவார்சடையுந் திங்களோர்முடியுங்
காதிலார்மகரகுண்டலமும்
மங்கையோர்புறமும் பொங்கராவணியும்
வண்டலைமாலைமார்பமுமாய்த்
துங்கநான்மறைக டுதித்திடவைத்து
தொழில்புரிந்தனே யென்னையாள்
சங்கராவேத சிரோணிவாழ்பரனே
சம்புவேதண்டபாணியனே. (௧)

முத்தனேமுக்கண் முதல்வனேநாரு
முலைபெருமலர் பதித்திறைஞ்சும்
பத்தரினுயர்ந்த வியாக்கிரமபாதர்
பதஞ்சலிமுனிவருண்மகிழ
நித்தமாந்தில்லை யம்பலத்தாடு
நிருத்தனேயென்னையாண்டருள்வாய்
அத்தனேவேத சிரோணிவாழ்பரனே
யப்பனேதண்டபாணியனே, (௨)

சைவமும்வீர சைவமுநீயே
சமையமெவ்வகையினுநீயே
ஐவகைப்பூத பேதமுநீயே
அண்டமுப்பிண்டமுநீயே

லைவிழியார்த மயக்குறநெஞ்ச
மடமையதிர்த்தாய்யுமாறருள்வாய்
தெய்வமேவேத சிரோணிவாழ்பரனே
சிவசிவதண்டபாணியனே (௩)

அந்தணர்மரபி லவதரித்துலகி
லாலயந்தொறுந்தமிழ்பாடி
வெந்துயர்கொண்ட முதலைவாய்ப்பிள்ளை
வெளிப்படவல்றழைத்தருளும்
சுந்தரமூர்த்தி தனைத்தடுத்தாண்ட
தொன்மைபோலென்னையுந்தடுத்தாள்
எந்தையேவேத சிரோணிவாழ்பரனே
யேகனேதண்டபாணியனே (௪)

உமையுயிரொளியிங் கிவையுறுமுறைமை
யுணர்ந்தசம்பந்தனுற்சித்த
அமைவுகண்ணுடைய வள்ளலார்க்கருளி
யதுமலாலென்புபெண்ணுருவாச்
சமைதரச்செய்து கழுவினிலேற்றிச்
சமணரைவென்றனையதுபோல்
எமையருள்வேத சிரோணிவாழ்பரனே
யீசனேதண்டபாணியனே (௫)

பூதமோரைந்தைம் பொறிபுலன்கரணம்
புகன்றிடுங்கருவிகளனைத்தும்
கோதறக்களைந்த பட்டணத்தடிகள்
கொள்ளைகொண்டெனக்கொடுத்ததுபோல்
ஏதமேதருமிவ் வுடன்மதித்திருக்கு
மேழையேற்கருளுவதென்றோ
நீதனேவேத சிரோணிவாழ்பரனே
நிமலனேதண்டபாணியனே (௬)

அண்டர்நாயகனே வாதவூரடிகட்
கருமறைமுடிவினுட்பொருளைத்

தொண்டர்கள்குழுக் குருந்தடிநிழற்கீழ்த்
துளக்குறவுணர்த்தனையதனைக்
கண்டனரெவருஞ் சாற்றுறவடியோன்
கழறுவதெந்தநாள்தனுமே
தண்டனேவேத சிரோணிவாழ்பரனே
நாலுவேதண்டபாணியனே (எ)

தத்துவத்தொண்ணூற் றாறையுங்கழித்துத்
தத்துவமெனுமிருபதமும்
சொத்தறவிமித்தக் கசிபதப்பொருளைக்
குடங்கையிற்கனியெனவருளும்
சித்தனேயுன்றன் றிருவடிக்கடியேன்
சேருநாளெந்தநாள்புகலாய்
முத்தனேவேத சிரோணிவாழ்பரனே
முதல்வனேதண்டபாணியனே (அ)

விண்ணவர்பரவுங் கயிலைவாழரசே
மெய்யறிவற்ற பொய்யமணர்
எண்ணருமெண்க ளப்பனைக்கற்றா
ணிழுக்கிவாரிதியிடைவீழ்த்தத்
திண்ணியவஃதே தோணியாய்க்கரையிற்
சேர்த்தநின்றிருவடிக்கபயம்
தண்ணினேன்வேத சிரோணிவாழ்பரனே (கூ)
நாதனேதண்டபாணியனே

பதிபசுபாச மூன்றையுமுணர்ந்து
பரமசற்குருவருள்புணர்ந்து
சதிசெயுங்கருவி கரணமும்விண்டு
சத்துவப்புசிப்பையுட்கொண்டு
விதிநிஷேதங்க ளற்றநின்னன்பர்
மெய்ப்பணிவிடைபுரிந்திடுறன்
மதியருள்வேத சிரோணிவாழ்பரனே
வரதனேதண்டபாணியனே. (ய)

தண்டபாணிபேரிற்பதிகம்
முற்றிற்று,

திருச்சிற்றம்பலம்.

# உபதேசவுண்மை.

## பாயிரம்.

காப்பு-விநாயகர்வணக்கம்.

விருத்தம்.

அத்திமுகத்தனை-நித்தநினைந்திட
முத்தியளிப்பன்-சத்தியமிதுவே. (க)

வெண்பா சுப்பிரமணியர் வணக்கம்

காணக்கிடையாத கற்பகமோதநற்படிகம்
பேணுற்றமேனிப் பெருமானும்-சண்ணுத்
திருவுருவனுந்தன்னைத் தேர்விலார்க்கெங்கள்
குருபரனுஞ்செய்வேற் குகன் (உ)

வேறு-சபாபதிவணக்கம்.

நல்லசேர்க்கையு நற்பொருள்வசனமு நணுகும்
தொல்லையாம்பிற வியுமினித்தோல்மு தகலும்
கொல்லும்பாதகக் கூற்றமேவந்தணு நறக் குலையும்
தில்லையம்பல வாணனைத்தினம்பணிந் திடவே. (ங)

வேறு-சிற்சத்திவணக்கம்,

அருவாயுருவாயருவுருவா யகண்டவொளியாயம்லபரா
பரையாமலருமணமும்போற் பரமசிவத்துட்கலந்திலகும்
ஒருநாயகியாய்சகலவுயிர் களையும்பெருதுபெற்றுதவும்
திருவார்ஞானச்சத்தியருஞ் சிந்தித்திறைஞ்சி மலமொழிப்பாம்()

வேறு-சொரூபவணக்கம்.

பிரணவவடிவைப் பேணிப்பொல்லாக்
கரணமதறவே கைக்கொண்டொழுகில்
புரணநல்லொளியும் பூவையுமிருபால்
மருவியகுருவாய் மகிழுமவமனமே (ரு)

வேறு-அல்லமாப்பிரபுதேவர்முதலிய அடியார்வணக்கம்

பொருவிலாப்பிரபுதேவர் பொற்பாதகமலம்போற்றி
அருமையாம்பசவதேவ ரடியிணைவணக்கம்போற்றி
திருநாவுக்கரையராரூர் வள்ளல்சிகாழிவள்ளல்
திருவாதவூரர்மற்றைச் சிவனடியவர்தாள்போற்றி. (௫)

வேறு-மகாகுருவணக்கம்

மருதிரிபிலக்கணமைபரு ளமரருண்டுமெஞ்ஞானமுழுதுந்தேர்ந்து,
விதிமுறையினெண்ணிரண்டு சாத்திரங்களுரைத்தருளிவிரத்தராகி
ந்,தமிபுரியுள்ளன்பினருமென்போலும்வஞ்சினருந் துரியாதீதப்
பதிபெறவோரிமைப்பிலருட்குமாரதேவன்கழல்கள்பரவிவாழ்வா,
[ம்

வேறு-அருளிறைவணக்கம்

செழுந்திருமாலு நான்முகத்தேவுந்
தெளிகிலாவொருபரம்பொருளே
பொழிந்திடுகிருபா மூர்த்தியாயிக்குப்
புண்ணியவடிவெடுத்தடியார்க்
குழந்தருள்போற்றி யொருமொழியதனை
யுணர்த்திடவெழுந்ததென்றுரைக்கும்
குழந்தைவேலவன்றன் மலர்முடிக்கணியாய்க்
கொண்டுவெம்பிறவிநோய்தணிப்பாம் (௭)

வேறு-நூற்பெயர்

நலமாயிதனைப்படிப்பவர்மெய்ஞ் ஞானமெளிதிற்பெறலாலும்
நியமாயிதனிற்பயிலுவோர் நெஞ்சமிறக்குமதனாலும்
பலவாந்தொன்னூற்கருத்துமிதிற் பகுத்துக்கூறுமதனாலும்
உலவாவிந்நூற்குபதேச வுண்மையெனப்பேர்நாட்டியதே (௮)

வெண்பா-அவையடக்கம்

எட்டோடிரண்டறியா வேழையேனிந்நூலைத்
திட்டமுடன்சொல்லத் தெரிகிலேனெட்டிரண்டின்
அந்தநெறிதெரிந்தோ ரனைத்துந்திருவருளென்
றொருத்தமைந்துகொள்வாருளத்து (௯)

பாயிரமுற்றிற்று

உ

# நூல்.

அவதாரிகை

இந்நூல் உபதேசவுண்மையென்று வழங்குதலால் முதற்செய்யுளின்கண்ணே உபதேசிக்குமுறையை யெடுத்து திருஷ்டாந்த பூர்வகமாய்ப் பொதுப்படக்கூறுதல்

பூவுலகாளுமன்னன் பொருந்தியதனதுசெங்கோல்
மேவருந்துலபோல்வேத விதிமுறையெங்குமோங்கப்
பாவனைமூன்றுந்காட்டிப் பழகியவமைச்சன்காணத்
திவரமாகத்தானே தியக்கறநடத்துமாபோல் (க)

இதுவுமது

சாதனமுதிர்ந்தோனுமித் தன்னடித்துணைவிடாது
நீதமாம்பணிகளுக்கு நிகழ்வுறச்செயுஞ்சீடற்குப்
போதமுண்டாகுமாறு பொருந்து * கன்னுதியாலே
வேதனைவிடப்போதிப்போன் மேதகுகுரவனுமே(உ)

வேறு-ஆசிரியர்தன்மையும் அனுசிரியர்தன்மையுமெடுத்துக் கூறல்

மெய்க்குருவைபடுத்திடுங்காலவர்நடையை விசாரித்துமேவவேண்டும்- எக்குருவுஞ்சற்குருவாய்க் காணுவதாலிழுக்கு நடையில்லோனுமி- மிக்கபரவுணர்வினனு; யகமமறையிலனுகி மேன்மைகூறும் அக்குருவேசற்குருவா மவனிடஞ்சேர்ந்தரியபணியாற்ற னன்றே

வேறு-நான்குசாதனமும் உபதேசித்தருளுமென்ற சீடனுக்கு

முந்தி முதற்சாதன முரைத்தல்

முத்திவேட்கையினர்சீடன் மோனசற்குருவைப்போற்றி
மெய்த்தசாதனங்களுன்கும் விளம்புவாயெனவவ்வாசான்
நித்தியாநித்தியவஸ்து விவேகநின்னெஞ்சகத்தே
சத்தியமாகக்கொண்டு நடையெலாங்கழிப்பாயென்றான் (ங)

இதுவுமது

நடைகழியென்றுரைத்த சற்குருமூர்த்தியேயென்
மடமறநித்தியாநித்திய வஸதுநிச்சயமனைத்தும்

---

* கன்னுதியென்பது-கண்-கை-தேகம்

திடமுறவுணர்ந்தேயிந்தத் தேகபோகங்கள்யாவும்
கடையெனவெறுத்தேயத்திறக்கட்டெலாமுரைப்பாயென்றான்

இரண்டாஞ்சாதனங்கூறுதல்

படர்தருமிவுத்திரார்த்த பரபோகவிராகமாதல்
நடலையாமுலகபோக நந்தேற வபோகமாகும்
அடருமவ்விரண்டும்பொய்யாந்தி யமாயைப்போலறவிடுத்துத்
திடமுறசமாதியாவுந் தெளிவுறத்தேர்வாயென்றான் (௬)

வேறு மூன்றாஞ்சாதனமுந் சொல்லவேண்டுமென்ற சீடனோ
க்கி மூன்றுசமைய இலக்கணங்கூறுதல்

எந்தாயிரண்டுசாதனமு முயர்க்கையாகத்தெளிவுற்றேன்
இந்தச்சமாதியறுவகையி னியல்புமெளியேற்கருளெனவே
அந்தக்கரணவாதனைக ளறிந்தவற்றி யமலமதாய்ச்
சிந்தையடக்கமில்லாமற் றிகழ்வதுவேசமமாகும் (எ)

வேறு-தமையிலக்கணம்

உடைபடுமுலகிற்சாலு முருவநாமங்கடம்மேல்
இடையிலடைவருமோகத்தா லிந்திரியவழியேநெஞ்சம்
கடையுறச்சென்றிபோகங் கைக்கொளுமதனையென்றும்
தடையுறவொருவித்தலை தமமெனவுரைப்பர்தாமே (அ)

உபாதியிலக்கணம்

மட்டிலாப்பெண்டிராதி மகிழ்புகழாவதெல்லாம்
கட்டறநீக்கவேண்டுங் கழலாதுதிற்குமாயில்
தட்டுறாதிறவிநீங்காத் தன்மையெந்நான்றுமின்றி
ஒட்டறவிட்டுநிற்ற லுபாதியாகுங்காணே (௯)

திதிக்ஷையிலக்கணம்

எண்ணருங்காற்றுமின்ன லிடியனலுபாதியாக
வண்ணமாமுஷ்ணசீதம் வந்திடுதுக்கங்கள்
கண்ணுறுமெண்டெல்லாங் கருத்தினிற்சமமாய்க்கொள்ளும்
திண்மைமாமுணர்வுதானே திதிக்ஷையென்றறிவாய்நீயே (௰)

சமாதானவிலக்கணம்

சிந்தையிலயநீக்கித் தேசிகனருளாற்பெற்ற
அந்தநற்பொருளையெல்லா மனைவுடன்மனனஞ்செய்து

முந்துறுசாதனங்களை முறையாற்குருவறிந்தெவ்வுறு
சந்ததமப்பியற்றிருத்தல் சமாதானமெனலாமே (௰௧)

சிரத்தையிலக்கணம்

தற்றவக்குருவாமீசனன் றனின்விருப்பமாகி
பெற்றதுநமூவாவண்ணம் பெரியவைராக்கியத்தால்
சத்தியஞானமுணர்ந்தத் தனிப்பரம்பொருளைநாடிச்
சந்தமாய்நிற்றலென்றுஞ் சகமுறுசிரத்தையாமே (௰௨)

நான்காஞ்சாதனமுணர்த்தல்

மூதறிவாருமந்த முமூக்ஷுத்வமுறையேதென்னில்
கோதுறந்தலையேல்வெய்ய கொடுந்தழல்பற்றக்கண்டோன்
வாதனைசகித்திடாமல் மடுசலந்தேடுமாபோல்
நீதமெய்க்குருவைத்தேடி நிற்றலென்றறிவாய்நீயே (௰௩)

வேறு- தாபத்திரயவகைகூறுகவென்றுசீடன்வினவுதல்

இந்தநான்குசாதனமு மிறைவர்வுன்றன்றிருவருளால்
சிந்தைமயக்கமில்லாமற் றிடமாய்ப்பெற்றேனதுவன்றி
தொந்தத்தாபத்திரயமெனத் தொடர்ந்தகுற்றமுற்றேன்
அந்தத்தாபத்திரயவகையதுவும் புகல்வாயெனப்பணிந்தான் (௰௪)

ஆதிபாத்மீகவகையுணர்த்தல்

அரியதாபத்திரயவகை யறையக்கேளத்தியாத்மீகம்
பெரியசரீரநோயுறுத லல்லாற்பிணுஞானேந்திரியம்
உரியகன்மேந்திரியங்கரண முணர்த்தவிவ்வேழுமிக
வெருவுத்தும்புக்கிடமாகு மியவைப்பகுத்துவிடுவாயே ()

ஆதிபவுதிகவகையுணர்த்தல்

மானவாதிபௌதீக வகையுங்கேட்டியெந்நாளும்
ஆனமிருகாதிகளினு லடருந்துன்பமஃதன்றி
ஞானகன்மவிஷயத்தா லன்றுந்துன்பகரணநான்
கினமுறச்செய்திடும்பமுமோ ரீரேழெனநீயறிவாயே (௰௬)

ஆதிதெய்வீகவகையுணர்த்தல்

இந்தவிதமவ்விரண்டொழிய விதன்மேலாதிதெய்வீகம்
சிந்தைகலங்கும்வெயிற்காற்று சீதமழையின்னிடிகுமுறல்

முந்தவுருகல்மண்டபங்கோ புரங்கள்வெடித்துவிழுதலெனும்
நொந்தத்துயரெல்லாம விலைமுன்னம்சொலக்கேட்பாய் (௰௭)

தத்துவங்கட்குத்தேவதையுரைத்தல்

அத்தோமுந்துரைசோத்தி யதற்குத்திக்குத்தேவதையாம்
மித்தவுரைத்தசக்காதி யதற்குவெய்யோன்பிறங்குகால்
அந்தக்கரணநாலினுக்கோ வுயிர்தபிரணனாயன்மால்
இந்தத்தேவர்பதின்ருல்வரிவராற்றுன்புக்களவின்றே (௰௮)

ஞானோபதேசஞ்செய்யும்படி சிட்டன்விண்ணப்பஞ்செய்தல்,

ஐயோவித்தத்தாபத்தி லழுந்திச்சகிக்கவொண்ணுமல்
மெய்யாவுன்றனிணையடிக்கீழ் விழுந்தவென்னைத்தடுத்தாண்டு
பொய்யாந்தேகபோகமெலாம் போமாவாக்கியப்பொருளை
ஐயாவடியேற்குபதேசித் தருளவேண்டுமெனத்துதித்தான் ()

நாலுமகாவாக்கியங்களையும் அதன்பயனையும்
சாமானியமாகக்கூறுதல்

அருளவேண்டுமென்றமா ணாக்கன்றன்னையருகிருத்தி
உரியஞ்ஞானம்பிரம முற்றவகம்பிரமாஸ்மியஃதி
விரியுந்தத்வமசியுடனே விளக்குமயமான்மாப்பிரமம்
தெரியும்படியிந்நால்வகையுந் தெளியவுரைப்பர்பெரியோரே ()

வேறு-இருக்குவேதமகாவாக்கியார்த்தங்கூறுதல்

இந்தநால்வாக்கியத்தி லியல்புய்யாமலறைந்திடக்கேள்
முந்துநால்வேதத்தன்னின் முடிந்ததோர்பொருளதாகும்
சிந்தனைக்கெட்டாஞானத் திகழ்வதேபிரமமென்ன
அந்தமாமிருக்குவேத மனுதினமறையுமன்றே (௨௧)

வேறு-ஏனையமூன்றுவேதமகாவாக்கியார்த்தமுங்கூறுதல்

அந்தநானேபிரமமானே னென்றறையுமெசுர்வேதம்
இந்தவதுவேநீயானா யென்னப்புகலுஞ்சாமமறை
உந்துமயமான்மாப்பிரம மென்றேபுகலுமதர்வணந்தான்
முந்தவுரைத்தவிருக்குமறை மொழியிலருத்தமொழிந்திடக்கேள்

(இருக்குவேத மகாவாக்கியார்த்தத்தைப்பிரித்துக் கூறுதல்)

எந்தவறிவாற்சத்தாதி யிலகுமன்றித்தேவர்நரர்
இந்தவிருத்தாவரங்க ளெல்லாமெதினாலியங்குமால்
அந்தவுணர்வேசைதன்னிய மதுவேபிரமம்வேறில்லை
முந்தவுரைத்தவாக்கியத்தின் முடிவுமிஃதென்றறிவாயே (உங)

எசுர்வேதமகாவாக்கியார்த்தத்தைப் பிரித்துக்கூறுதல் )

எந்தவிடத்துநிறைந்தபர மிசையுந்தனுவிற்புந்திக்குச்
சொந்தசாட்சியாய்த்தானாய்ச் சுபமாயிலகும்பிரமமே
அந்தவகமென்றெசுர்வேத மறையுமஃதைத்தெரிந்துநீ
பந்தமுழுதுமறவிடுத்துப்பரமஞானம்பெறுவாயே (உச)

சாமவேதமகாவாக்கியார்த்தத்தைப் பிரித்துக்கூறுதல்

இந்தச்சீவதேகேந்திரி யாதிக்கப்பா லிலங்குவதாம்
அந்தப்பிரமநீயேயென் றறைந்ததல்லாலதன்பின்னும்
இந்தநீயேசகமதனுக் கிசைந்தவொருகாரணமென்ன
அந்தச்சாமவேதமதே யறையுமதனையறிவாயே (உரு)

அதர்வணவேதமகாவாக்கியார்த்தத்தைப் பிரித்துக்கூறுதல்

இந்தப்படியேசுயஞ்சோதி யாகவெழிலாயிலங்குவது
அந்தவயமான்மாப்பிரம மென்றேயறையுமதர்வணந்தான்
சிந்தைகலக்கமில்லாமற் றேர்வாயிவற்றையெனக்கேட்ட
மைந்தன்வணங்கிக்குருவேயிவ்வழிக்குத்தடையேதுரையென்றான்

வேறு-ஆன்மாவுக்குத்துக்கமின்றெனல்,

பருதியின்முன்னரிருளிருந்தாற்போற்பரமசித்துருவனாமின்பால்
சுருதியாற்குருவால்விசாரிக்குமிடத்துச்சூழ்துக்கமேயின்றால்(ல்
அரியவித்துக்கமடியனேனெஞ் சத்தனைந்தகாரணமென்னையென்
னி, பெரியவோர்தனையக் கள்ளனென்றென்னும் பெற்றிபோ
லென்றறிவாயே

சகலதுக்கத்துக்கும் அஞ்ஞானமேகாரணமெனல்

இந்தவாதனைகளேதினாலென்னிலிராகாதிகுணங்களினாலே
அந்தவிராகமேதினாலென்னிலபிமானவாசனையாலே

முந்தமிபான மெஞ்ஞானமென்னில்மூடமாமவிவேகத்தாலே
நந்தவிவேக மெஞ்ஞானமெனிலஞ்ஞானத்தாலென்றறிநீயே (௨௮)

வேறு—அஞ்ஞானப்பற்றறவிடுதியுமுணர்த்தல்,

அந்தப்பெரியவஞ்ஞான மதுவுமெங்கேயென்றுமேல்
சிந்தைக்கெட்டாதறிவுருவாய்த் திகழ்ந்தவுண்மைமறந்திடமே
இந்தப்பெரியவஞ்ஞான மிரியும்படியிங்குரைக்கையில்
முந்தவுணர்த்தஞான முறில் முழுதும்போமென்றறிவாயே (௨௯)

தத்வமசிவாக்யார்த்தத்தைப்பகுத்துச் சொல்லுகவென்று
சீடன் வினவுதல்,

இந்தஞானப்பொருளடியேற் கியம்பவெழுந்தகுருமணியே
அந்தஞானமணியென்பா லமைந்ததற்கோராயமிலை
வந்ததிரிபும்போவதற்கு வகையாய்த்தத்வமசிப்பொருளை
முந்தமொழிந்ததன்றியின்று மொழியவேண்டுமெனப்பணிந்த

வேறு-ஆசிரியர் அதன்மகிமையைக் கூறுதல் (ன்

ஆதலிற்பிரம்மாதிகட்குமருமைபானவற்புதமாவாக்கியமேகேட்க
வேண்டும், எதமூறுவாக்கியங்கள்கேட்கலாகா விரண்டற்றவத்துவி
தானந்தரான,போதகுருவினையளிப்பாற்றைக்கண்டுபொய்யற்று
ப்பணிவிடைகள்செய்துஞான,சாதகத்துக்கிடானவிடயமெல்லா
ந்தவிர்த்தின்றுண்மை நிலைதானேயெய்தும் (௩௧)

வேறு - இதுவுமது.

அந்தமாவாக்கியத்திலமர்ந்திடுபதமூன்றுளும்
தொந்தமாய்வன்னமுஞ்சொன்மனமிறந்ததற்கும்
முந்துநால்வாக்கியத்தின் முடிபுமப்பதத்திலுண்டாம்
சிந்தனைசெய்யுமாறுசெவிதனிலுரைசெய்வோமே (௩௨)

மூன்றுபதார்த்தத்தையும் வற்புறுத்திக்கூறுகவென்றுசீடன்
திரும்பவும்விண்ணப்பஞ்செய்தல்

எந்தனுக்கருளுமாறிச் செழுந்தசற்குருவேபோற்றி
முந்துறுதொம்பதார்த்த முடிவுறுதத்பதார்த்தம்
அந்தமாமசிபதார்த்த மாகியபதார்த்தமூன்றும்
சிந்தையிற்றேர்ந்துஞானத் திடமுறவுணர்ப்பாயென்றான் (௩௩)

வேறு—அங்ஙனங்கேட்டசீடனுக்குக்கேட்டல் சிந்தித்தல்
தெளிதலென்னு மூன்றியல்பையு மெடுத்துக்காட்டி
சொரூபநிலையையுஞ் சாமானியமாய்க் கூறுதல்

உரைக்குமொழி கேட்பதுவே சிரவணந்தா
னுட்புணர்ந்து நிற்பதுவே மனனமாகும்
நிரைக்கருவி யாகுமிருள் போகுமாறு
தெளிந்துநிலை நிற்றல்நிதித்தியாசனந்தான்
பரக்குமொளி மிக்குமொளி யிருளங்கேது
பார்க்குமிடந் தொன்றுமிலை பரமேயாகும்
விரைக்குமொரு வித்தின்றேல் முளைப்பதேது
மெய்யனே யெவ்வுயிரு நீயேயாவாய் ௧௪

இதுவுமது

ஆறிலும்பிரமத்துக்கியல்போரொட்டு
மரிதானகுறியாறு மாகுங்கண்டாய்
நீரெனவிரண்டில்லா தெங்குந்தானே
நிறைந்தபூரணமாகு மற்றொன்றில்லை
மோனமேயதுமுச்சுடருமாகு
மொளியேசச்சிதானந்தமாகும்
தானுருஞ்சகசானுபூதியாகித்
தன்மயமேயதுவாகுங் கணித்துப்பாரே ௧௫

வேறு—சீடன் தொம்பதவுபாதியை வினவுதல்

அரியநூற்பொருளனைத்து மங்கையிற்கனிபோலெற்குத்
தெரிதரவுணர்த்தவந்த தேசிகவரசேபோற்றி
சுருதிசம்மதமதாகத் தொம்பதவுபாதியேழும்
திரிபுடனைபரீக்ஷித்துத் தெளிந்திடவுரைப்பாயென்றான் . ௧௬

வேறு—அதன்வலிவை ஆசிரியர்கூறுதல்:

தொம்பதத்திற்சீவனுக்கங் குபாதிகளாமேழுந்
தொலையாதசாக்கிரசொப்பனஞ்சுழுத்தியாவும்
கம்பீரான்சர்போத னிருவகையாமதனை
கட்டாற்றில்விட்டகதை யாகவமன்வந்தால்
தன்பிணம்போனான் தான்தானேயென்று
துக்கமின்றிமார்படித்துத்துக்கியமுங்கூத்தை

அம்பலவனறிவான்மற்றாரறியவையோ
வதனையறிந்தாயடியையாரடையாம்மா ௧௭

வேறு—பின்னும் சீவபாதியேறையும் பிரித்துக்கூறுதல்.

சீவற்குபாதிசரீரமொன்று நிகழிந்திரியங்களோரொன்று
நாவுங்கரணமிரண்டு தயங்கும்பிராணவாய்வொன்று
மேவுமிவ்வையேமுறைப்பர் வேதமுணர்ந்தோரிவைகழித்துப்
பாவமபாவமறவுன்னைப் பரமாய்க்கண்டுமகிழ்வாயே ௧௮

வேறு—சீவனுக்கு அவஸ்தைகளும் அபிமானிநாமங்களும்
எடுத்துக்கூறுதல்,

அந்தமிலாச்சீவனுக்கவஸ்தைகளோர்மூன்று
மபிமானிநாமமொருமூன்றுமெங்ஙனென்னில்
சந்ததமுஞ்சாக்கிரத்தினமிசஞ்சொப்பனமாந்
தக்கவதினமிசமேசுழுத்தியிஃதல்லால்
பந்தமுறப்புரிந்திடுவிச்சுவனெடுதைசதனும்
பகர்பெரியபிராஞ்ஞனுமாமெனப்புகல்வர்நல்லோர்
இந்தவிதமவஸ்தையபிமானிகடம்மானே
யெப்போதும்பிறப்பிறப்புக்கிடமாகுங்காணே ௧௯

வேறு—இத்தத்துவங்களைப்பிரித்துச்சொல்லுகவென்றுவினவுதல்

ஐயனேயென்னையாளு மருட்பெருங்கடலேபோற்றி
உய்யமாறுனாத்தவெல்லா முணர்ந்தனனுண்மையன்றே
பொய்யுடலாதியாகம் பொருந்துமேழவஸ்தைதம்மில்
மெய்யிதுபொய்யிதென்ன விரித்துரைசெய்யுமென்றான் ௨௰

தேகேந்திரியமுதலிய தத்துவங்கள் பிருதிவியின் கூறென்றும் மனம்
வாயுவின்கூறென்றும் நீ சித்தென்றுங்கூறுதல்.

அரியதேகேந்திரியங்களைநீ யறிவாயுன்னையவையறியா
அரியதேகேந்திரியங்க ளதுவும்பிருதிவியின்கூறாம்
அரியமனத்தைநீயுமெதிர்த் தறிவாயுன்னையஃதறியா
அரியமனமும்வாயுவின்கூ றாதவிளங்குமென்றறியே ௨௧

புத்தி அக்கினியின்கூறென்றும் அகங்காரம்பிருதிவியின்
கூறென்றும் அறிவித்தல்:

ஓதும்புத்திதனைநீயே யுணர்வாயஃதுன்றனையுணரா
பேதபுத்தியதினமிசம் பிறக்குமழலின்கூறாகும்
சேதம்புரியுமகங்காரஞ் சேண்மைமுழுதுநீயறிவாய்
யதிலுன்னையஃதறியா திதுவும்பிருதிவியின்கூறே ௨௨

சித்தம் அப்புவின் கூறென்றறிவித்தல்

அந்தச்சித்தமதனை நீ யறிவாயுன்னையஃதறியா
அந்தச்சித்தமதுதானே யப்புவின்கூறாகுமால்
அந்தநாள்குஞ்சஞ்சபசஞ் சலிச்சபமாமூன்றுமன்றி
அந்தவபிமானமுமாகு மவைநீயலவென்றறிவாயே ௨௩

பிராணவாயுவு பிருதிவியின்கூறென் றறிவித்தல்

அரியபிராணவாய்வுன்னை யறிபாங்கதையேறிருவாய்
அரியபிராணவாய்வமிச மதுவின்பிருதிவியின்கூறும்
அரியபிராணனைதைப்பிறிந்துங் கழியுமிடத்துவேறாகும்
அரியபிராணனதுவுமே யசத்தென்றுணர்ந்துவிடுவாயே ௨௪

தத்துவங்கள்முழுதுஞ்சடமென்றும் நீ சித்தென்றுமறிவித்தல்

உன்னாலறியப்படும்பொருள்க ளுன்னையறியமாட்டாதால்
உன்னாலறியும்பொருளெல்லா முனக்குவிடயமாங்கண்டாய்
உன்னாலறியும்பொருளழியு மொருகாலமுநீயழிவதில்லை
உன்னாலறியும்பொருளைவிடுத் துன்னைவிசாரித்தறிவாயே ௨௫

வேறு—இங்கனங்கேட்டசீடன் நானாரென்று வினவுதல்

இத்தனையுநானென்றேயிருக்கவெல்லா
மிதுவாக்கிநீயல்லவென்று சொன்னீர்
அத்தனையுமாரோதானாரோதா
னரியவோநானறியச்சொல்லுமென்னச்
சத்தியனேசொன்னவெல்லாஞ்சடமதாகுஞ்
சந்ததமுஞ்சுகசொருபனாகுமுன்னைப்
பத்துபேரெனச்சொல்லுந்திட்டாந்தத்தைப்
பார்த்துநீபிரித்துணர்வாய்பரமஞானம் ௨௬

வேறு—தசமன்திருஷ்டாந்தத்தால்பகுத்துக்காட்டுதல்

உன்னைநீயறிவதற்கிங் குறுதியாந்திட்டாந்தங்கேள்
மன்னியதசமனைப்போல் மருவியகரணநான்கு
சொன்னவிந்திரியங்களைந்து தொகையுறமொன்பதோடு
உன்னுடன்பத்தென்றெண்ணி யுன்னைநீயறிகுவாயே ௨௭

சீவனுக்கு முக்கியலக்ஷிய முரைத்தல்.

அந்தவறிவேசைதன்னிய மதுவேயுணர்வடிவாகும்
அந்தவறிவேயுபாதிவசத் தாகும்போதமுங்கியமாம்
அந்தவறிவேலக்ஷியமா மழுந்துமுபாதிதனைப்பிரியில்
அந்தவறிவேநீயாகு மரியவேதமுடிவிதுவே ௨௮

சிவனுக்குச்சத்தாசத்தங்கூறுதல்

அசத்தவுபாதிசைவென்ற மத்தவறிவேயசத்தமதாம்
அசத்தவுபாதிதனைக்கழித்த வத்தவறிவேசத்தமதாம்
அகத்தமெல்லாங்கழித்தவிடத் தறிவேயன்றிவேறில்லை
அசத்தத்துக்கஞ்சடமாகு மதுவேதேகமுயிரலவே ௪௯,

இந்தஅஞ்ஞானகாரியத்தையொழிக்குமுபாயங்கூறுக
வென்று சீடன் வினவுதல்

சொல்லொடுமனத்துக்கெட்டாச் சுந்தரகுருவேபோற்றி
கல்லதுபொல்லாதேது நடுவனுக்கிடமேது
வல்லிருட்போகமேது மாயையின்செயலனைத்தும்
ஒல்லையிலறுக்குதன்னுமுபாயமெய்க்குரைக்கவென்றான் ௫௦

அஞ்ஞானநீக்குமுபாயங்கற்பித்தல்

அறிஞரேமுன்னோர்சொன்ன வரியநூற்பயனெலாமும்
பொறிவழிசென்றுபோகம் பொசித்திடாதிருக்கத்தானே
மறமொடுகோபமாதி வஞ்சனையொழித்துஞான
நெறிவழுவாமலிந்த நிலமிசைவாழ்குவாயே ௫௧

வேறு,

(சாதுசங்கமுஞ்சிவபூசையும் குருபணியும் செய்யவேண்டுமெனல்)

கொல்லாவிரதங்கைக்கொண்டு குணமேற்கொண்டபெரியோர்கள்
பல்லோருரைத்தஞானநூற் பலவின்கருத்துமென்னென்னில்
நல்லோரிணக்கஞ்சாதுசங்க நண்ணிச்சிவத்தைப்பூசிப்ப
தல்லாற்குரவன்பணிவிடைக ளன்பிற்றினமும்புரிவதுவே ()

இவையனைத்தும் சாட்சிமாத்திரமாய்விளங்குநிமித்தமேயெனல்

நல்லாரிணக்கஞ்செய்வதுவு ஞானநாட்டங்கொள்வதுவும்,
கல்லாவனைத்துங்கற்பதுவுங் கனத்தவிசாரம்புரிவதுவும்
சொல்லாச்சொல்லையறிவதுவுஞ் சுகமாய்வாழநினைப்பதுவும்
எல்லாமாயல்லவுமாகி யிருந்தசாக்ஷியாவதற்கே ௫௪

அஞ்ஞானவிர்த்தியும் அத்தவிடுதியில் நீயே சிவசாக்ஷியாகியசுட்
ஸ்தலமொன்றும் அதுவேவிட்டலக்கணையென்றுங் கூறுதல்

பெரிதாமுபாதியத்தையெல்லாம் பேணியவற்றின்மறைந்தாய்
தெரியவுன்னலறியமெலாந் தெளியப்பிரித்துநோக்குவையேல்
உரியமகவேசாட்சிசி யுற்றவெல்லாங்கழித்தநிலால்
அரிதின்விட்டலக்கணையென் றறைவர்பெரியோரறிவாயே ௫௫

வேறு-சீடன்றிரும்பவும் தத்பதவுபாதியை இன்னும்வற்
புறத்திக்கூறவேண்டுமெனல்

தாமறியாமலெல்லாந்தடுத்தாண்டகுருவேபோற்றி
பெரியதோர்கொம்பதத்தின்பின்னால்களெல்லாமையம்
திரிவறவுணர்ந்தேனின்னந்தெரியவேதத்பதத்தின்
பிரிவெலாமநளவேண்டுமெனப்பினுமவணங்கிநின்றான் ௫௫

வேறு-தத்பதவுபாதிகூறல்

தத்பதத்திலீசனுக்குமேழுபாதிகளாந்
தானவைக்குங்காரணமாய்சகலபிராணிகட்கும்
அற்பவுடல்கொடுத்தறிவுக்கறிவாகியூட்டு
மவ்விளையாட்டறிபாதவசடர்செயுந்தவங்கள்
சொற்பனத்திற்கண்டபொருள்கைக்கெட்டாததுபோற்
சோர்மதுவுங்கண்டவறிவின்றுகளறுக்கமாட்டார்
எப்பிறவிதொறுமுயிருக்குயிராகுமீச
னெங்குமாமவனேபொழிந் தொன்றிலையென்றறியே ௫௬

ஈஸ்வரவுபாதியேழும் இவையெனல்

செப்பரியசீவர்தமைக்கூட்டுதல்காரணமாய்ச்
சிறந்துநின்றவீசனுக்கேழுபாதிகளென்னென்னில்
தப்பிலாச்சர்வக்ஞன்சர்வகாரணனே
சர்வேந்திரியாமியொடுகருசர்வேஸ்வரனே
ஒப்பிலாச்சர்வசிருஷ்டிசர்வஸ்திதியல்லா
துயர்ந்திலகுஞ்சர்வசங்காரனென்பவரிவைதேர்ந்
தப்பனேயுபதேசவுண்மைமறவாம
லனுதினமுஞ்சிந்தைசெயிலகமமைதவிர்மே ௫௭

வேறு-சீடன்ஈஸ்வரவுபாதியேழும்பகுத்துக்கூறவேண்டுமெனல்

சொன்னதொருபாதியேழுந் தொகையதாவறிந்துகொண்டேன்
இன்னுமென்கறிவதாக விஃதிஃதெனப்பிரித்தே
அன்னவனுபாதித்தம்மி லழுந்துவதழுந்தாதெங்ஙன்
தன்மயமாவதெங்ஙன் சாமிநீயுரைக்கவென்றான் ௫௮

வேறு-சர்வக்ஞத்வலட்சணங்கூறுதல்

இந்தியங்கண்முழுவதுமே யிசைந்தொன்றறிந்தொன்றறியா
அந்தமுழுதுந்தானறிந்தன் கவற்றைச்சீவர்விளக்கிடாப்
பந்தித்தசைவித்தூட்டுவித்துப் பரமசிவமாயிலங்குமதால்
மூந்தவருசர்வக்ஞனென்று மொழிபலாகுமெனத்தேர்வாய் ௫௯

## சர்வகாரணத்வலட்சணங்கூறுதல்

அடிமேவன்வினைவுஞ்சங்கையேயலா மகற்றவெழுந்தகுருநாதா
முறையாயின்னமுளவினைத்தா மொழியவேண்டுமெனக்கேட்டில்
குறையாவிந்திரியங்களெல்லாங் குணமேற்றழிந்துங்காணழியா
துறலாற்சர்வகாரணனென் றுரைப்பர்பெரியோரெனவறியே ௩௰

## வேறு-சர்வக்கிரியாமித்வ சர்வேஸ்வரத்வ லட்சணங்கூறுதல்

இந்திரியங்களுக்கெலாமுள்ளீடாய்நின்றிகையாலே
சந்ததமந்தவீசன்சர்வக்கிரியாமியாகும்
இந்தவிந்திரியங்கட்கெல்லாமேலாய்நின்றிலகுமாற்றால்
அந்தவீசன்சர்வேஸ்வரனெனவறையலாமே ௩௧

## சர்வதிருஷ்டத்வ சர்வஸந்நிதித்வ லட்சணங்கூறுதல்

தோற்றமிந்திரியங்கட்கென்றும் தோன்றவைக்கையாலே
தேற்றமில்வீசன்சர்வ திருஷ்டியுமாகுமெய்யர்
ஆற்றுமிந்திரியங்கட்கம்மை யவனேரட்சிக்கையாலே
போற்றுமவ்வீசன்சர்வ ஸந்நிதியெனப்புகலலாமே ௩௨

## சர்வ சம்ஹாரத்வ லட்சணங்கூறுதல்

இவ்வாறுரைத்ததெல்லாவிலகுமிந்திரியங்களெல்லாம்
தன்றுக்குளடங்கிநிற்குந்தன்மையால்மறையுணர்ந்தோர்
அன்னவன்றனைச்சர்வசங்காரனென்பரந்தோ
சொன்னவிவ்வேழுமீசன்சொரூபமன்றெனக்காண்பாயே ௩௩

## சீடன் யீஸ்வரவல்லமையும் அபிமானிகாமமுங் கூறுகவெனல்

இந்தநல்லொழுங்கைபண்பாலெனக்குபதேசஞ்செய்ய
வந்தசற்குருவேயுன்றன்மலர்ப்பதம்போற்றிபோற்றி
யந்தபாசங்கடாந்தபானுக்காமவல்லமைபோல
முந்தபிமானிகாமமுற்றுமெற்கருள்கவென்றான் ௩௪

## வேறுயிஸ்வரவல்லமையும்அபிமானிகாமமுங்கூறுதல்

இந்தவகையீசனுக்குக் காரணமாமவஸ்தை
யியலானதுரியமெனுங்காலபராசக்திதம்
அந்தமூன்றவஸ்தைதமக் கபிமானியாவர்

ஈடுமெயவிராட்புருடனுறிரண்ணியகர்ப்பன்
தோகதவஸ்வியாயிருத்தலையனறனைப்பராய்சேலார்
ஆகளிலானென்மறையின்றுணிவுயிராங்கண்டாய்
சிக்கையினிலித்தவழி கல்ம்தெளிவானும்
சித்தியுமுத்தியுமெளிதிற் சேருமிதுதின்னம் சுரு

வேறு—ஈஸ்வரனுக்குமுக்கியலட்சியங்கூறுதல்.

காரணவுபாதியேழாங் காரிபகடத்துமீசன்
காரணவுபாதிதம்மிற் கலந்துறுன்றபோது
காரணமாகுமுக்கியங் கைவிடலியச்சியந்தான்
காரணமாகவெல்லாங் கண்டுகொண்டிருத்தல்காணே சுசு

ஈஸ்வரனுக்குச் சுத்தா சுத்தமுரைத்தல்

அரியகாரணவுபாதி யாகுமோரவஸ்தைமூன்றும்
கிரமுறயானென்றெண்ணுந் திசையீசற்கசுத்தமாகும்
பரவியஞானனந்தப் பான்மையிற்றனிருந்து
பெருகுமவ்வவஸ்தைநீக்கும் பெற்றியேசுத்தமாமே சுஎ

மாயாநீக்கமும் அந்தத்திசையே யீஸ்வரசாட்சியாகிய பிரமமென்றும்

அதுவேவிடாதலக்கணையென்றுங்கூறுதல்

மகத்துவமிகும்விசிஷ்ட வாக்கியமதனுற்கண்டு
நிகழ்ந்துகாரியவுபாதி நீங்கிக்காரணமோரேழும்
அகற்றியக்கவைக்குச்சாட்சி யாகிவிண்போலிருப்பன்
தொகுத்திடுமிதைவிடாதலக்கணையெனச்சொய்வாரோ ()

அந்தாளிவரனே மும்மூர்த்திவடிவமாய் உயிர்கள் நிமித்தம்

முத்தொழிலையும் நடாத்துவனெனல்

இந்தவேழுபாதிக்கெல்லாஞ் சாட்சியாமீசன்றனே
பந்தவான்மாக்களுக்கும் பாகதிக்குதவியாக
விந்தையாய்த்தேகமாதி வினைவழியளித்தேயென்றும்
தொந்தமாய்நின்றுமூன்று தொழில்புரிந்திடுவனென்றுன் ()

இங்ஙனங்கேட்டசீடன் நிஷ்டைகூடி சமாதியில் தொம்பத சோதனை
செய்து தன்னைசாட்சிமாத்திரமாய்த் தரிசித்தல்

குருமொழிமலையிலக்காய்க் கொண்டமாணாக்கன்றானும்
அரியவேரோருபாதி யபிமானியவஸ்தையெல்லாம்
பிரிவுடனையகற்றச் சிந்தித்துக்கழித்தபின்னர்
துரியமதாகிச்சுத்த தொம்பதசாட்சியானான் ௭௰

தத்பத சோதனைசெய்து ஈஸ்வரசாட்சியாகிய பிரம
த்தைத்தரிசித்தல்,

இன்னிலைபெற்றசீட னீசனதுபாதியேழும்
துன்னியவவஸ்தைமூன்றுங் கொடாபிமானிமூன்றும்
பின்னமதறப்பிரித்துப் பிரித்துணர்ந்தெல்லாந்தானுந்
தன்னிகர்பிரமமாந் தத்பதசாட்சியானான் ௭௧

அதுவேஇதுஇதுவே அதுவெனுந்தற்போதமும்
இறக்குகிறதல்;

இருவகையாகுமிந்தச் சீவனுமீசனுந்தான்
ஒருமையிற்கொண்டிருந்த வுபாதியோடவஸ்தையெல்லாம்
குருவருள்வழியேநின்று கோதறத்தெறிந்தகற்றிப்
பிரிவறவிருந்துசுத்தப் பிரமமாய்மேவினானால் ௭௨

சுவானுபூதிமேலிட்டினும் அத்துவைதானந்தத்தினின்று
தெளிதல்.

அரியவப்பிரமந்தன்னை யகண்டவாக்கியத்தினாலே
பிரியறக்கண்டதல்லாற் பேசியசீவசாட்சி
பெருகுமீஸ்வரன்றன்சாட்சி யெனும்பிரிவற்றங்கொன்றாய்த்
தரமிலத்துவிதானந்த சமரசசுபாவமானான் ௭௩

இங்ஙனம் தடையற்ற நிரதிசயானந்தத்தைப் பெற்றசீடன்
அடங்காமகிழ்ச்சியால் ஆசிரியரைப்பலவாகத்துதித்து
இன்னமும் அதிபதார்த்தங் கூறவேண்டுமெனல்

உரைக்கருமின்பம்பெற்ற வுவகையான்மகிழ்ந்துள்ளாறி
நரைக்குளெற்கருளவேந்த தயாளுவேயதிபதார்த்தப்

பெருக்கமுமறிந்தாயேல் பிறவிநோய்தீருமவ்வண்ணம்
தெரிக்கவென்றடியில்வீழ்ந்தான் தேசிகனிணைப்பதாளே ௭௪

வேறு—அபேதார்த்தங்கூறுதல்

அபேதார்த்தங்கூறுமிடத் தபிமானிகளாந்திறற்சொலின்று
விசுவக்கிராசமாம்பிராசாபத்தியமின்னமன்னம்புங்கால்
இசையும்பொற்புவிசாங்கனை வியப்புமிவற்றைபகுத்தொழிந்து
நசியுமுபசாந்தமுந்தீர்ந்து ஞானம்பரத்திற்களிப்பாயோ ௭௫

இதுவே விட்டுவிடாத லக்கணமெனல்

நிதமுஞ்சீவவுபாதியெலாநேராய்ப்பிரிந்துங்கழித்துவிட்டுப்
பதியாமீசனுபாதியெலாம் பயிற்றுந்தொழிலால்விடாமையினால்
இதுவேவிட்டுவிடாதலக் கணமென்றுரைப்பர்மறைவல்லோர்
அதிநுட்பமதாமிதனையுமுன் னநுபூதியிற்கண்டுணர்வாயே ௭௬

வேறு பின்னரும் சுகாதீதநிலையை வற்புறுத்திக் கூறுதல்

இந்தவாறுணர்த்தயாவு மிடைவிடாதசாவிதிற்றும்
அந்தமாம்விசாரத்தாலே யதுவிதுவெனுமயக்கம்
சிந்தையிலொன்றுமின்றிச் சிதம்பரமாவாயாகில்
முந்தவேயெல்லாஞ்செய்து முடித்தவனாகுமென்றான் ௭௭

வேறு பிரமத்துக்காறுகுறியும் இவையெனல்

திடமுறத்தேசிகன்மொழிந்த தனுபவத்தியற்றெளிந்தே
சிற்பரத்துக்காறுகுறியென் றெவ்வாறெனில்
வடிவுநுண்மைமாப்பொருளுடைமைநிறைவுடனே
மன்னுமிரண்டறவிளக்கு முடிவென்றும் பழமை
கெடுதியடையாதென்றும் புதுமையெனப்பகர்வார்
கேதமிலாநான்மறையின் பொருளுணர்ந்தபெரியோர்
தடைபடுசந்தேகவிபரீதமறநீயுஞ்
சதாநிஷ்டனாயிருந்து சாதித்துக்காணே ௭௮

வேறு-பிரமத்துக்கெட்டியல்பும் இவையெனல்.

செப்பியதோர்குறியாறுஞ் சேர்ந்தனின்றுந்
திடமாகவெட்டியல்பு மருள்கவென்றான்
அப்பனேயொருகேள்விபிறந்ததாத
லரிதானதரிசன மிறந்ததாதல்
எய்ப்பிலாமிகுவீர மிறந்ததாத
லெல்லையிலாவானந்த முடையதாதல்

௬

ஒப்பிலெல்லையிலா ஞானமுடையதாத
லுயர்கலந்தேசந்திக் கிரக்கதாதல் ௭௯

வேறு-இவற்றையனுபவத்தின் றெளிந்து சகாளந்தாறு
நிதியைப்பெற்று அடியார்க் கேவல்செய்யெனல்

என்றுரைத்திடவர்மேலோ ரிவற்றையுன்னனுபவத்தில்
நன்றுறவுணர்ந்தனர்ந்து ஞானமேவந்தாயினரவ்
தொன்றுமுன்றவத்தைப்போட்டே நூபாதியுமறக்கழித்து
நின்றுமெய்யடியார்க்காளே யிசைந்திடும்பிறவிபோமே ௮௦

இங்ஙனமானசீடனுக்கு அகமமதை தொடராதிருக்கும்படிதிரு
வுளங்கொண்டு ஆசிரியர் முனியாதமுனிந்துகூறுதல்

உலகினிற்சிலபேரிந்த வுபாதிகளின்னதென்று
பலவகையானநூலிற் பார்த்துமேவிட்டதில்லை
இலகிடக்கேட்டறியு மிழிவுறுதேகபோகம்
கலமெனவெண்ணிவாளா காளலாய்கழிக்கின்றாரே ௮௧

அஞ்ஞானிகளைப்பொதுப்பட இகழ்ந்துகூறுதல்

ஒப்புரவாகவெந்த வுயிர்களுமுட்கொண்டிக்
கைப்பொருளுடலமபூமிக் கலாதனம்பெண்டுபிள்ளை
செப்பருஞ்செல்வமெல்லாஞ் சிதையாதென்றிருமாந்தென்றும்
தப்படைந்துமாலுந் தகைமையென்சொல்வேனென்றான் ௮௨

அங்ஙனங்கூறக்கேட்டசீடன் பயபத்தியோடு திரும்பவும் ஆசி
ரியர் சந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்குதல்

எடுத்துரைசெய்தவெல்லா மிறைவநின்னருளானன்றுப்
அடுத்தவைபெரிதிட்டுன்னி யறிந்தனனவற்றையெல்லாம்
விடுத்தவென்வினைவைநோக்கில் வெறுஞ்சிரிப்பாகுமத்தைத்
திடத்துரைசெய்வேன்சுவாமீ திருவுளஞ்செய்குவாயே ௮௩

வேறு - இதுவுமது.

* ஆனந்தமானபா சிவமதனைநாடிபோ
ரந்தனன்றவமியற்ற
வருளாலெழுந்தருளு மீசனைவணங்கியவ
னரியவரமொன் றெழிந்தோன்
தினமுறநோற்கவவ் விறைவன்முனிக்குநீ
யிழிவாஞ்சடா முனிவனு

---

* இது குமாரதேவர் சரித்திரத்திற் கண்டுகொள்க.

பிடுகொள்ச்சரபமிடவதனையெற்றக்கவனு
மிலகுமோரரபிலெழி
மானமுடனேவயிந் தல்வழியில்வருமவனை
மருவிப்பிடித்த வகைபோல்
மாஞானமுறவுடலெடுந் தனதமறந்துவின்
மாயைவினையான்மயங்கி
ஊனமுறுவினைவைப்பிடித்துழலு மறிவிலேற்
குனமனமிரங்கி யின்னம்
உனமோகவினைவுபுரி செயலுரைத்தருளுமென்
றுவந்தடி பணிந்தானரோ ௮௫

வேறு-அன்னம்வின்ணப்பஞ்செய்த சற்சீடனுக்கிரங்கி பின்னரும் அன்வினையின்தன்மையையெடுத்து விசேஷமாகக்கூறுதல்

வினைவின்செய்கையெலாமெடுத்து நிகழ்த்துந்தன்மைகேட்பாய்
வினைவின்செயலேயுலகமாய் நிகழ்வதாகுமன்றியிந்த
வினைவின்செயலேயெனதியா னெனநீடகந்தைக்கிடமாகும்
வினைவின்செயலேமாமாயை யென்றுமியதிசெய்வாயே ௮௬

அந்தக்கரணவழியே சிவன்பொருந்துமெனல்

பஞ்சகோசமாவதுவே பகருமொருமூன்றவத்தையாம்
பஞ்சகோசமாவதுவே பரவுஞ்சரீரக்கோட்டையாம்
விஞ்சுஞ்சரீரக்கோட்டையிலில் விளையுங்கரணநான்குளதாம்
மிஞ்சுமந்தக்கரணவழி மேவுஞ்சிவனென்றறிவாய் ௮௭

நானீயென்னு மகம்பாவ நீக்கவேண்டுமெனல்

நானீயென்றுநினைவதனு ளமருபத்தோர்றரவாம்
நானீயென்றுநினைவதனு ணல்லவறிவுமறைப்பாகும்
நானீயென்றுநினைவொழிய ஞானவிசாரஞ்செய்வாயேல்
நானீயென்றுநினைவொழிந்து ஞானநிலையைப்பெறுவாயே ௮௭

இந்திரியநிக்கிரகம் பண்ணவேண்டுமெனல்

புற்றுந்தேகக்குகைபதனிற் பொருந்திவாழுமோராவம்
புற்றுந்தேகேந்திரியவழிபோய்ப் புலனைமறித்துப்பிடித்திழுத்து
புற்றுங்குகையிற்கட்டுமட்டும் போக்கும்வரவும்விடுவதில
புற்றுக்குகையிற்கட்டுண்ட புலனைக்கழித்துவிடுவாயே ௮௮

தேகாபிமானம்நீங்கவேண்டுமெனல்

தேகமென்றுந் தேகியென்றுந் தெரியாருலகநிலைவினவே
தேகமானமொழியாதார் தேகியையுமறியாதார்
தேகமானமொழியாது தேகியையுங்காண்பதில்லை
தேகமானமொழித்துவிட்டுச் சிவமாய்க்கண்டுதெளிவாயே ௮௯

அவஸ்தைகளின் சுத்தாசுத்தம் அறியவேண்டுமெனல்

அவத்தைமூன்றுஞ்சீவர்கட்கு முரியவிசாரந்தமக்கும்
அவத்தைமூன்றுமெய்ப்பொருட்கு மறையுமிந்தமூவகையில்
அவத்தைபசுத்தஞ்சீவர்கட்கே பரமவர்கட்கிலதாகும்
அவத்தைபசுத்தமறிந்துவாழ் வதாலேமுத்திப்பயனுமே ௯௰

தேகபக்கம் விடவேண்டுமெனல்

தேகமதுவேயுலகமதாய்த் திகழுமதுவேயுருநாமம்
தேகமறிந்தும்பரமறியா தெதுவோவதுவேமாயையாம்
தேகவுதவிச்சாதனங்கள் திடமதாமவ்வளவும்
தேகமதனைக்கைவிடவே திரங்கநிலையென்றறிவாயே ௯௧

மாயாகற்பிதத்தால் துன்பமெனல்

இல்லாமாயையுண்டெனவே யிருப்பதென்றுநிலவென்றுணர்வாய்
இல்லாமாயைக்கிட்டான மெங்கேயிகழ்வதென்றுணர்வாய்
இல்லாமாயையகற்றலே யிடரேயில்லையென்றுணர்வாய்
இல்லாமாயைவினையுளக்கொண் டுடலர்கதியேவிடவென்றான் ௯௨

இந்த வினைவிற்றன்மோசம்போனேன் சுவாமியென்று
சீடனிரங்குதல்

எத்தாயங்கோவதுதிகொடுத் திங்கள்வளாவிலிங்கிலேவே
தொத்தவியாதியதுபோலத் தொடர்ந்துநோயூர்த்துபற்பலவாம்
வித்தைபுரிந்தென்றுமுழுதும் விநாசஞ்செய்ததால்
முத்துமதனையொழித்திடவேமொழிக்கன்குருநாதனுமொழிவான்

மாயாகற்பிதத்தை யத்திபாபுத்திரஞ்சோலக்கண்டு
சுபாவமா யிருப்பாயெனல்

இல்லாவுலகமுண்டென்ன விருக்குநிலையேமலமாகும்
இல்லாமாயையுண்டென்னவிருக்குநிலையேமயற்பாகும்
இல்லாவித்திருவகையு மிழிவாய்க்காணவிடரில்லை
இல்லாவிவற்றையின்றென்றே யிருப்பாயென்றறிவிப்பாயே ௯௩

நினைவிறக்கும்படி இன்னமுஞ் சாதிப்பாயெனல்

நினைவினிடத்திற்பசுபாச நிகழுமதுவேயுலகமாம்
நினைவிறுதிப்பொழிங்கழுமே நிகமோக்கமல்வெளியாகும்
நினைவுநீக்கிற்பாசமது மில்லாதென்பதுறுபயமே
நினைவுநீங்கச்சாதனந்திலிருப்பாயென்றுநிலையாமே. ௬௫

வேறு-நினைவிறக்க வில்லையேயென்ற சீடனுக்குபாயங்கூறுதல்

சாதனத்தானினைவிறாது யென்றுரைத்த
சற்குருவேயின்மொழியென்றாலுமெய்கொண்டேன்
பேதமறச்சாதனத்திலிருக்கும்போதும்
பிரிந்துபலவழியிலவைவருவதென்னென்னில்
மாதவனேயவை நினைவக்குலக்கேது
வாசனையாற்பிரிந்தலைந்துமாறியிருக்கும்
ஆகலினாற்குருபணியில்விடனைப்போற
மதிபிரசமாகிலந்தவலையும்போகும் ௬௬

வேறு-பின்னரும் அஃதேவினவின சீடனுக்கு அந்தநினைவை
இருவகையாய்ப்பகுத்துக்கூறுதல்

நினைவுநிலக்கச்சமாதிநிலை நிகழ்த்துங்குருவேநின்னருளால்
நினைவுநிலக்கச்சமாதியினி னிற்கநிலையாதென்னையெனில்
நினைவையிரண்டுகூறாக்கி னில்லாநினைவும்வெளிப்படுமந்
நினைவைத்தள்ளிநிற்பதுவே நிலைத்தசமாதியென்றுணர்வாய்.

இதுவுமது

சுருதியெல்லாமிருநினைவாய்ச் சொல்லுமந்தப்பொருடோன்றச்
சுருதிசிவனினைவுபரனினைவென்றிரண்டாய்ச்சொல்லுமால
சுருதியுரைக்கும்பொருளுணர்த்தச் சற்குருவும்வேண்டுமால்
திருந்தியருந்தண்குருவினாற்றெரிந்துசுகந்தனைப்பெறுவாயே. ௬௮

இதுவுமது

சுருதிக்கருத்தம்பொருளென்று மதுவுஞ் சொல்லாய்முடிந்திடுமால்
சுருதிக்கருத்தம்பொருளானாற் றாயதருவும்வேண்டுவதில்
சுருதிக்கருத்தம்பொருளல்ல வொன்றேதுணிந்துமானுநீ
சுருதிசொல்லும்பொருளதனைச் சுட்டிக்காட்டவறிவாயே

இந்தவினையிருக்காமல் தவமுடியாதெனல்

இந்தவுலகஞ்சத்தானா லிந்தவினையுஞ்சத்தாகும்
இந்தவுலகமசத்தானா லிந்தவினையுமசத்தாகும்
இந்தவுலகுக்கதிட்டான மிந்தவினையன்றியில்லை
இந்தவினையின்றுளளவு மியற்றுந்தவங்கண் முடியாதே ௰

இதுவுமது.

இந்தவினையேமாயையா மிலங்குமிதுவேயுலகாகும்
இந்தவினையையல்லாதோ ரிடருமில்லைச்சாதனங்கட்
கிந்தவினையையகற்றும மியற்றுந்தவத்தாற்பயனில்லை
இந்தவினையிருக்குமட்டு மோக்கநாக்குக்கிடமில்லையே, ௰௧

இதுவுமது.

இந்தவினையையறிந்தொரு மிழுக்குமனைத்துந்திறமறிந்தார்
இந்தவினையில்லையிவதனை யென்றுஞ்சொல்லவளவுபடா
இந்தவினையுநீங்காதே யெல்லாஞ்சிவமாய்க்கண்டாலும்
இந்தவினையிற்சிவமறைந்தேயிருளாயெங்குமருளாமே. ௰௨

இதுவுமது.

இல்லாவினையென்றறிவதுவு மியற்றுந்தவத்தின்முயற்சியதே
இல்லாவினையுமில்லாமன் றனையெண்ணவேண்டுமால்
இல்லாவினையுமில்லாம லெப்போதொழியுமெனக்கேட்கில்
இல்லாவினையுநீங்குதற்கே யிந்தவுணர்வின்றுற்றதுவே. ௰௩

இதுவுமது.

ஒருதன்வினையேயசுத்தமா மொருதன்வினையேசுத்தமாம்
ஒருதன்வினையேபுத்தியா மொருதன்வினையேசித்தமாம்
ஒருதன்வினையேயகங்கார மொருதன்வினையேயுலகமாம்
ஒருதன்வினையேசங்கற்ப விகற்பமாமென்றுணர்வாயே. ௰௪

இதுவுமது.

பந்தவினையுநீங்காதேற் பரமஞானநிலைப்பதில்லை
பந்தவினையுநீக்கத்திற் பரமஞானநிலைக்குமால்
பந்தவினைக்கிடையிங்கே பகருமிச்சையதுவாகும்
பந்தமிச்சையொழியாதேற் பாழ்த்தவினையுமொழியாதே ௰௫

இந்தநினைவுபெரியோர்களுஞ் சேவலாளா யிருந்ததெனல்.

இந்தநினைவைப்பல்லோரு மெளிதாயெண்ணியிடருற்றார்
தொந்தநினைவைமுதறிஞர்தொடர்ந்துவதைக்கமுயல்வுற்றார்
முந்துநினைவவ்வறிஞர்நமக்கேவலாளாய்முடிந்ததால்
அந்தவறிஞரதுகண்டுள்ளாறிமகிழ்ச்சிகொண்டினரே. ௭௬

நினைவின்றன்மையுரைத்தற்கரிதெனல்

இந்தநினைவையிவ்வளவென்றெடுத்துக்கூறமுடியாதால்
இந்தநினைவின்றன்மையையேயெல்லாநூல்கள்மொழிவதுவும்
இந்தநினைவையுரைக்காத நூல்களொன்றுமிலதாகும்
இந்தநினைவுமாய்ந்தவிடத்தில்லாவிருளுமாய்ந்திடுமே ௭௭

இவற்றில்பரநினை வீதென்றும் உயிர்நினை வீதென்றுங் கூறுதல்

நினைவிற்கெங்கேயிடமென்றுநினைக்குமதுவேபரநினைவு
நினைவினுடனேபரநினைவுநீங்காதிருக்குந்தன்மையினால்
நினைவேபெருகுபரநினைவுநிமலமானபொற்பொடியாம்
நினைவினுள்ளேமறைந்ததனுணிகழுமிச்சைக்கிடமாமே ௭௮

இச்சாத்தியாகமேயறிவெனல்

இச்சைநினைவைக்கண்டறிவாரெல்லாந் துறந்தமெய்த்தவத்தோர்
இச்சைநினைவையிச்சையுளாரொன்றுமறியமாட்டார்கள்
இச்சைநினைவாம்பொய்ப்போகமிரியமாட்டாதொருக்காலும்
இச்சைநினைவுநீங்குமிடமெங்கென்றுணர்தலுணர்வாகும் ௭௯

இந்தநினைவை யாவராலுந் தடுக்கப்படாதெனல்.

இந்தநினைவைப்பிறிப்பவராரிந்தநினைவைமறிப்பவரார்
இந்தநினைவைப்பிடிப்பவராரிந்தநினைவைக்கெடுப்பவரார்
இந்தநினைவைத்தொலைப்பவரா ரிந்தநினைவைக்கெலிப்பவரார்
இந்தநினைவினுறப்பெல்லா மெதிர்க்குமிடத்திற் றோன்றிடுமே

இந்தநினைவின்றன்மைகுருமுகத்திலறியவேண்டுமெனல்

இந்தநினைவின்கூறெல்லாமெடுத்துமொழிந்தோஞ்சுருக்கமதாய்
அந்தநினைவின்பொருள்விளங்காதார்சாரன்றிச்சுருதியினால்

இங்ஙனமாகில் அதுநீயானாயென்னும் அத்துவிதானந்தசுகத்தைப்பெறுவதெப்படியெனில்-

நீயதுவானாயென்று ஆசிரியர்பிரகடமாக உபதேசித்தருளுமுறைமைப்படி முன்னர் நீயென்னுஞ் சீவனுக்குண்டானசரீரத்திரயமும் அவஸ்தாத்திரயமும் அபிமானத்திரயமும் ஆக௯-க்கழித்து அதிற்சேடித்துநின்ற சீவசாட்சியாக கூடஸ்தரிசனஞ்செய்து பின்னர் அதுவென்னும் ஈஸ்வரனுக்குண்டான சரீரத்திரயமும் அவஸ்தாத்திரயமும் அபிமானித்திரயமும் ஆக௯-க்கழித்து அதிற்சேடித்துநின்ற ஈஸ்வரசாட்சியாகிய பிரமதரிசனஞ்செய்து அப்பால் ஆனாயென்னும் பதார்த்தமாகிய அனந்தாதீதமே தற்சொருபமாய் கூடஸ்தபிரமமென்னுந்துவிதபாவமுமிறந்து அத்துவிதானந்தத்திலமிழ்ந்திமதுவுண்டவண்டுபோநசுகித்திருக்கலாம் இவ்வேசனைகள் மாவலி பகீரதன்முதலிய பெரியோர்களனுபவித்த சகசானந்தானுபூதியாகும் இதைச்சற்குருகடாட்சத்தினாலுண்டாகும் சுவானுபூதிகண்டுகொள்க

உபதேசவுண்மைக்கட்டளை

முற்றிற்று






சிவமயம்

# தோத்திரமாலை

பலவகைச்சந்தங்கள்

## விருத்தம்

சீராருஞ்செஞ்சடையார்செல்வவுனக்காளாகுஞ்
சிந்தையாளர்
தாராருங்கொன்றையணிதாணுவேநின்னிருதா
டலைமேற்கொண்டு
பேராருமானந்தக்கடல்பணிந்தாரடியனேன்
பேதையானேன்
காராருங்கயிலையில்வாழ்கற்பகமேயென்னையுங்
காக்கவேண்டும் ௧
பெருந்தவத்தின்முயன்றவர்களெல்லாரும்
பேரின்பத்தாசையாலே
வருந்தியுனைப்போற்றியென்றுமாருதபுண்டரீக
மலர்த்தாள்சேர்ந்தார்

அருந்தவமிலாவடியேனன்பிலேயின்பத்துக்
  காசையாகிப்
பொருந்திலேனெல்லையுமோர்பொருட்படுத்திப்
  புண்ணியனென், புன்மைதீர்ப்பாய் ௨

பொய்யுலகவாழ்வகளைமெய்யாகவெண்ணிமனம்
  பொருந்துநாளில்
ஐயமறத்தருளவெவராலுமுடியாதென்
  னையனேநின்
கையினாற்சைகைசெய்துகருத்தறிபாகாயேற்குக்
  கருணையாலே
உய்யுமாறருளியதுமுன்னருளேயல்லான்மற்
  றொன்றுமின்றே ௩

பாழானமாயையினாற்பட்டகதைமெத்தவுண்டு
  பாழ்த்தநெஞ்சால்
விழாதபடுகுழியில்வீழ்ந்தழுந்துநெறியறியா
  வினர்தம்மைத்
தாழாதுதாழ்ந்தொருசாண்வயிறுவளர்த்திடுந்தொழிலே
  தலைமையாய்க்கொண்
டாழாதநிராருக்காளானேனாயேநின்
  னருள்செய்வாயே ௪

எல்லையிலாப்பரவெளியாயெக்காலுமோரியல்பா
  யிருக்குந்தேவே
நல்லறிவாலடியவர்களெல்லாருநின்னடிக்கே
  நாட்டமானார்
புல்லறிவாற்சிறியேனுன் பொன்னடிக்கன்பியற்றாது
  புலம்புகின்றேன்
ஒல்லையிலென்பிழைகடவிர்த்தோங்காரத்துட்பொருளை
  யுணர்த்துவாயே ௫

சிந்தையுன்றிருவடியைச்சேராமற்பாழுலகைச்
  சேர்ந்துபெற்ற
விந்தையதையடியேனால்விரித்துரைக்கமுடியாது
  மெய்யொன்றில்லாப்

பந்தவிருண்மூழ்குமெனைக்கைவிட்டாலுன்னையன்றிப்
பாலிப்பாரார்
சுந்தரற்காய்ப்பரவையிடந்தூதுசென்றசங்கரனே
துரியவாழ்வே ௬

சுத்தபரவெளியென்னச்சொலக்கேட்டதல்லாமற்
சுருதிநேராய்க
கற்றதிலைகற்றவரையாயினுங்கண்டறிந்துள்ளங்
கரைந்ததில்லை
பெற்றபயன்யாதுமிலைநின்னையன்றியெனைக்காக்கும்
பேரன்பாளர்
சற்றுமொருவரிலைதற்பரனேநின்சரணஞ்
சரணமன்றே ௭

நில்லாததேகமிதைநிலையாகக்கருதிநெடு
நாளாயுண்மை
கல்லாதபுல்லியர்பாற்கலப்புண்டுகிடப்போர்க்குக்
கருணைகாட்டிப்
பொல்லாதபிறப்பிறப்பிலாநாமற்சிவனேமெய்ப்
பொருளையூட்டிப்
பல்லோருங்கண்டுவக்கப்பரமகதிக்காளாக்குவதுன்
பண்பதாமே ௮

உண்மைநிலையுணராமலுன்னடியேனென்றுரைப்ப
துனக்கேயல்லால்
தன்மையறிவுடையோர்க்குமாகாதவார்த்தையே
தமியேனிங்குப்
பெண்மயக்கின்மூழ்குவதும்பேராசைகொள்வதுமெம்
பெருமானேயிம்
மண்மயக்கமெய்துவதுந்தீர்ந்திடநின்றிருவருளை
வழங்குவாயே ௯

சுத்தவடியார்களுன்பொற்றிருவடிக்கேயாளாகிச்
சுகங்கைக்கொண்டார்
உற்றதுணைமற்றியாவருனைப்போலுமடியேனுக்
குலகிலையா

மடமையகியறப்போக்கிக் கருமெல்கஜக்கமமாய்
மன்னுமூன்று
திடவுருவைப்பூசித்து நேசித்து நிற்கவருள்
தேவதேவே. (௰௪)

குணக்கடலேயருட்கடலே குறையாதபவதக்கடலிற்
குளித்தேயுன்றன்
இணைக்கமலமறயுணர்ந்தறியாதில்லாதமாயைவசத்
தெய்தியிந்தப்
பிணக்குடிலைமெய்யென்று பெண்ணினல்லார்பொய்ப்போகப்.
பிரமைகொண்டேன்
கணக்கறியாதுழல்கின்றே னிம்மயக்கையொழிப்பதுமுன்
கடமையாமே; (௰௫)

அருளுடையாயழகுடையா யானந்தக்கடலுடையா
யழிவிலாமெய்ப்
பொருளுடையாய்மாமாயை வில்லிருளிலெந்நாளும்
புக்கிநிற்கும்
மருளுடையார்மனக்காட்டை யறத்தறிக்குஞானவா
ளுடையாய்மோனத்
தெருளுடையாயோங்காரத் துட்பொருளைநாயேற்குத்
தெரிவிப்பாயே (௰௬)

நித்தனேநின்மலனே நிர்க்குணனேநிர்ப்பயனே
நிலைமையான
முத்தியனேயுனைமறந்து மும்மலத்திலழுந்துமிந்த
மூடநெஞ்சால்
பெற்றபயன்யாதுளதென்றெண்ணியுனைபின்தொடர்ந்து
பிதற்றுவேனைச்
சத்தியனேகைவிடுத லின்னருளின்றன்மைக்குத்
தக்கதன்றே, (௰௭)

அருட்கடலிற்குளிப்பவரை யன்பினாலணைத்தெடுத்திங்
கேகண்டஞானத்

தெருட்கடலிற்குளிப்பாட்டிப் பரானந்தவமுதூட்டுஞ்
    செயல்போற்பொல்லாக்
கருக்கடலிற்புகாதெடுத்துள் வஞ்சமெலாமறவிட்டிக்
    கருணையாலோர்
பொருட்படுத்தியென்னையுநின் பொன்னடிக்கேயடிமைசெய்ப்
    பொருத்துவாயே, (௰௮)

அன்னநடைப்பெண்ணாளன்னடுவிருக்குநீயுமவ
    னடுவுளாவாய்
மன்னமடியேனடுவுளிருவிருமிருக்கருளு
    மாற்மமெய்யேல்
பின்னுமடியேனுமடியார்நடுவுளிருக்குமருள்
    பெருகவைப்பாய்
முன்னவனேநின்னருளின் றன்மையையென்னென்றெடுத்து
    மொழிகுவேனே (௰௯)

கண்மணியேகடைக்கண்ணே காதலித்தவடியார்க்குக்
    காத்லாரும்
உண்மணியேயுயிர்க்குயிரா யுறைமணியேயுன்னைவிட்டிவ்
    வுலகுதன்னில்
பெண்மயக்கிலாழும்வஞ்சப்-பேய்குறக்காயிம்மனத்தாற்
    பேயாய்நின்றேன்
சண்முகனைப்பெற்றசிவ சங்கரனேயெனக்கபயந்
    தந்தாள்வாயே (௨௰)

வாழுகன்போழக னுடையுழுகன்றுடையழக
    னொளிர்பூங்கொன்றைத்
தாழருத்திராக்ஷ மார்பழக னுன்னழகைத்
    தனித்துநோக்கில்
ஆழகுஞ்சிவனேநின் றிருவழகுக்கொவ்வாதென்
    றறையும்வேதம்
ஓரழகுமில்லாதேனுன்னழகைநயென்னென்றிங்
    குரைசெய்வேனே (௨௧)

முத்தருக்கும்பெத்தருக்கு முறைவிடந்தான் வேறுரு
முதல்வனேநின்
பத்தருக்குன்பொங்கமலம் பதநிழலேயிடமாகும்
பாசநீக்காப்
பெத்தருக்குன்பொற்பதமிசுடு காடல்லாற்பேசுமிடம்
பிணவேருண்டோ
சித்தசுத்தியில்லாத சிறுநாயேனின்னருளைச்
சிந்திப்பேனே, (உஉ)

சரியையெனுமொருமார்க்கந்தனிலேனுஞ்சார்ந்திலேன்
சார்ந்தநல்லோர்க்
கரியபணிசெய்துமிலேனின்னடியைய்ருச்சிக்கு
மன்புமில்லேன்
உரியமனைவாழ்க்கையினி லுழன்றுநாட்கழித்தே
னுடையாயுன்றன்
பெருமையடியார்களடிக்காட்படுவதென்னாளோ
பேசுவாயே, (உ௩)

அரியதெனச்சுருதிசொலுங் கிரியைநெறிக்கருமமெலா
மமையக்கேட்டும்
ஒருபொழுதாயினுமியற்றே னியற்றுமவர்தம்பதமு
முவந்துபேணேன்
கரியகுழன்மடமாதர் கலவியையேய்னுதினமுங்
கருதிநின்றேன்
குருபரனேநின்னடியைக் கூடுநாளெந்நாளோ
கூறுவாயே, (உ௪)

யோகமெனவுரைக்குமொழிகேட்டதல்லாலொருசிமிட்
மேனுமந்தப்
போகமனுபவித்தறியேனனுபவித்தயோகியரைப்
போற்றுகில்லேன்
சாகுமவர்தம்முறவே யுறவாகவெண்ணியெண்ணிச்
சலித்துநின்றேன்
ஆகெடுவேனுடையாயுன்னடைக்கலமேயல்லாதொன்
றறிகிலேனே (உ௫)

ஞானமாம்பெரும்பேற்றைநாடியதையனிஷ்டித்த
நல்லோர்நெஞ்சில்
மோனபஞ்சாக்ஷரமாம் வித்தான்றிருஞானமூலை
முளையச்செய்வாய்
நீணறும்மனைப்பாசத் தவிலுழலுந்தீயியேனைத்
தேவர்போற்றும்
வானநாயகனே நின்பொன்னடிக்காளாகுவதெவ்
வாறேசொல்வாய், (௨௩)

தந்ததந்தைத்தாளறுத்த வெந்தைபிரான்றன்னைநீ
தடுத்தாட்கொண்டு
சிந்தைகலக்காதவழிசெய்துபவம்போக்கியருட்
டேறலீந்தாய்
எந்தையேயடியே னெதுபிழைசெய்தாலு
மிரக்குவாயேல்
முந்தவுனைவிடுத்தவிடஞ்சேர்வதற்கோரையமில்லை.
முக்கண்ணனே, (௨௪)

காதலையுன்னைவிடுத்திவ்வுடலைநானென்று
நம்பிவீணாய
பாதகத்துளாகிப் பலபிறப்பிலாழ்ந்துழலும்
பாழ்த்தநெஞ்சின்
திகற்றியுன்னடியார் குற்றேவல்செயக்கருணை
செய்குவாயேல்
ஓதநீர்க்கடல்புடை சூழுலகிலுறுமோகமெலா
மொழிந்துபோமே, (௨௫)

அம்மையேயப்பாவென்றன்பிறவால்வாழ்ந்திருக்
கண்டஞானச்
செம்மைபாஞ்சிவபதத்தை யுதந்தருளும்பெருமானே
சிவபிரானே
மும்மையாமலத்தழுந்தி யிருவினைக்கேயாளாகு
முடனாயேற்
இம்மையேயளவைகத்தனைப்பெறநின்றிருவுள்ளத்
தெண்ணுவாயே (௨௬).

மன்னுமெனைமடிபிடித்து வலியிழுத்திழுத்துள்ள
    மாப்பையெல்லாம்
பின்னமுறச்செய்ததுவுமல்லாமழிவுறுமிப்
    பிணசரீரம்
இன்னமுந்தான்வாராதவழிபுரிந்தருள்பெருமை
    யெவரோசொல்வார்
கன்னியுமைக்குருகியொரு புறமளித்தவருண்முகிலே
    கருணைக்குன்றே, (௬௰)

தருமநெறியுணராமஞ்சகதமும்பொருளேடித்
    தக்கவன்பர்
அருமையறிந்தேத்துமிலாவென்னையுமோர்பொருட்படுத்தி
    யன்பனாக்கித்
துரியநிலையறிவித்துச்சுத்தவடியாரடியிற்
    றுன்னவைத்த
பெருமையனேயுன்னைவிடுத்தினிமேலுமொருவனைநான்
    பேசுவேனோ, (௬௧)

நல்லோர்களுறவுசெயும் பசையிலாப்புல்லியர்பா
    னசையேகூர்ந்த
பொல்லாவென்னெஞ்சகத்தைத் திருத்தியுன்றன்பொன்னடியைப்
    புகழவைத்தாய்
எல்லாருங்கண்டுவப்பச்சனகன்முதனால்வருக்கா
    யிரங்கிமேனாள்
கல்லாலின்கீழமர்ந்த கற்பகமேமெய்ப்பொருளே
    கயிலைவாழ்வே (௬௨)

இத்தனைநாளிவ்விலங்கிலிருந்துழன்றனடியவரோ
    டிணக்கமாகிப்
புத்திவழியறிந்தன்பப் போதநூலாய்ந்தவற்றின்
    பொருளுசாவி
முத்திவருதேடறியா மூடனெஞ்சாலப்புண்டு
    மோசம்போனேன்
அந்தணனேயினியேனுமென்கைநெகிழவிட்டிடா
    தருளுவாயே, (௬௩)

இருவினையாற்பவமெய்துமெனவெஞ்சத்திழுக்குங்கடை
யின்மையாகித்
தெரிவையர்கள்புரிமயலாக்கமொடுடுக்கமுற்றுத்
தியங்குவாயேன்
கருவழியக்கடைக்கணித்துக்கண்ணுதலேவுன்னருளைக்
காட்டவேண்டும்
பரசிவமேமறைமுதலேமலமறுத்தமெய்யடியார்
பங்கில்வாழ்வே (௩௮)

சுருதியொருநான்குமுபநிடதமோரெண்ணான்குஞ்
சொல்லுமாற்றம்
விரிவுபெறக்குருவருளாற்கேட்டிருந்துமம்முற்று
வீணனாகத்
திரியுமெனக்கறிவருளியழிவிலாச்சிவஞானந்
தெளியவைத்த
அருமையையென்னென்றெடுத்துமொழிகுவேன்சிவபேறின்,
னடியனேனே (௩௯)

பொன்னுலகுந்தனைப்புரக்கும் புரந்தரனுநியவானோர்
பொறைமிகுந்தே
மன்னுமாதவமுனிவர்சித்தரிருடிகண்ஞான
மகிமைபெற்றோர்
இன்னவரெலாமிருக்கவென்னையொருபொருளாக
வெண்ணியாண்ட
தென்னவதிசயம்பகல்வாம்பரமேசின்னருளியல்பை
யென்னென்பேனே (௪௰)



வேறு

பழையவடியாரெல்லாரும்பரனேயுன்னைப்பரவியன்பால்
அழுதேயுள்ளக்குழைந்துகுழைத்தலறியுலர்ந்துன்னருள்பெற்றார்
முழுதுமுணர்தலாதியாய்முன்னவருமெண்குணத்தோனே
இழுதையென்னின்றுனைப்பணியேனென்னேயிறுமாந்திருப்பேனே (௧)

அப்பனைக்குருவாய்க்கொண்ட வப்பூதிநாயனார்தம்
செப்பருஞ்சுதர்நால்வர்க்குஞ் சிறந்தவனிலிறக்கவப்பர்
மெய்ப்புறவெழுப்பப்பாடு மேன்மையைக்கேட்டவேனுந்
எப்படிப்பாடுவேனுன் னிணையடிக்கேளாதன்றே (௭)

பாண்டியனடித்தன்றி பரிவுறுவிசயன்றும்
காண்டிவக்கொண்டடித்தான் கல்லெறிபத்தனும்
தாண்டிவந்தடித்தாரித்தத் தகைமையாலவர்க்களித்தாய்
ஆண்டவாவென்றுகூவு மடியேற்குமருளுவாயே (௮)

தாழ்ந்தவனுயர்ந்தோர்தன்னைத் தாக்குவனெனுஞ்சொன்மாறி
வீழ்ந்தசந்திரனைநீதான் விரிசடைநீதில்வைத்தாய்
சூழ்ந்துமாதவர்களேத்துந் துய்யனேயுலககவாழ்வில்
ஆழ்ந்தவென்மனமுநின்றாளமைவுறவருளுவாயே (௯)

உன்னையேயன்றியொன்று முணர்விலாவறிவினோரும்
அன்னைப்பப்பாவென்றுன் னெழுதமுதருகுவாரும்
வன்னமென்மலர்த்தாள்சேர்ந்து மாறுதவாய்வுபெற்றார்
முன்னரோயுன்னைவிட்ட மூடனுங்கூடுவேனோ (௰)

அன்பர்நின்னடியாரெல்லா மரகராவென்றுபோற்றி
இன்புறுஞ்சுகத்தைப்பெற்றாரேழையேனென்புதைந்து
புன்புலால்பாக்கையோடுன் புகழினைநாவாற்சொல்லுந்
தென்புகொண்டிலனென்செய்கேன் சிற்பரானந்தவாழ்வே (௰௧)

ஆக்குவாய்காப்பாய்காத்தங் கழிப்பாய்மின்னுவற்றையெல்லாம்
தூக்குவாயுயிர்கள்செய்யுந் துன்பமாம்பவமனைத்தும்
நீக்குவாய்நிமலனேயுன் னிணையடிவழுத்தாநெஞ்சைப்
போக்கியிங்கருளவேண்டும் பொய்யிலாமெய்யர்வாழ்வே (௰௨)



வேறு;

உம்பகுர்கரசேபோற்றி யுமையிடப்பாகாபோற்றி
எம்பெருமானேபோற்றி யென்னுயிர்த்துணைவாபோற்றி

அம்பரவுருவேபோற்றி யாருயிர்க்குயிரேபோற்றி
தம்பிரானென்னையாளுந் தாணுவேபோற்றிபோற்றி (௧)

திங்கள்வேணியனேபோற்றி நிராட்சகனேபோற்றி
மங்கையோர்பாகாபோற்றி மான்மழுகழுதரித்தாய்போற்றி
பங்கயப்பாதாபோற்றி பழமறைக்கரியாயபோற்றி
எங்கணுநிறைந்தாய்போற்றி யேகனேபோற்றிபோற்றி (௨)

அண்டருங்கரியாய்போற்றி யாலயமமர்ந்தாய்போற்றி
சண்டனையுதைத்தாய்போற்றி சஞ்சலமறுப்பாய்போற்றி
மிண்டரைக்காய்ந்தாய்போற்றி விளக்கொளிபோற்றிநீல
கண்டனேபோற்றியெங்கள் கண்ணுதல்போற்றிபோற்றி (௩)

அன்னையேயப்பாபோற்றி யாகமத்தலைவாபோற்றி
பன்னருமொளியாய்போற்றி பரகதியளிப்பாய்போற்றி
மன்னுநல்லருளேபோற்றி மாமறைப்பொருளேபோற்றி
என்னையாள்பவனேபோற்றி யீசனேபோற்றிபோற்றி (௪)

முப்புரமெரித்தாய்போற்றி முத்தொழில்புரியாய்போற்றி
ஒப்புறுஞ்செல்வாபோற்றி யொருசிவக்கொழுந்தேபோற்றி
செப்பரும்புகழோய்போற்றி சின்மயவெளியாய்போற்றி
இப்பிறப்பொழிப்பாய்போற்றி யெந்தையேபோற்றிபோற்றி (௫)

கரியுரிதரித்தாய்போற்றி காலருத்திரனேபோற்றி
அரியயற்கெட்டாய்போற்றி யகண்டபூரணனேபோற்றி
திரிபுரதகனாபோற்றித் தில்லையம்பலவாபோற்றி
நரிபரிசெய்தாய்போற்றி நம்பனேபோற்றிபோற்றி (௬)

சோதியேபோற்றிஞானச் சுயம்பிரகாசாபோற்றி
கோதிலெண்குணத்தாய்போற்றிக் கொக்கிறகணிந்தாய்போற்றி
ஆதியேபரனேபோற்றி யகவிருடுணிப்பாய்போற்றி
நீதியேபோற்றியன்பர் நேசனேபோற்றிபோற்றி (௭)

அம்மையையொழிப்பாய்போற்றி யரும்பதமளிப்பாய்போற்றி
மும்மலக்களைவாய்போற்றி முக்குறும்பறுப்பாய்போற்றி
மம்மர்நோய்தீர்ப்பாய்போற்றி மலைமகள்பாகாபோற்றி
செம்மலர்ப்பதனேபோற்றிச் சிவசிவபோற்றிபோற்றி (௮)

தேவர்கடேவேபோற்றித் திருச்சிற்றம்பலனேபோற்றி
மூவர்கண்முதலேபோற்றி முச்சுடரொளியேபோற்றி
பாவனாதீதாபோற்றிப் பரமசிற்சொரூபாபோற்றி
மேவரும்பரனேபோற்றி விமலனேபோற்றிபோற்றி, (௯)

அருள்பொழிமுகிலேபோற்றியருட்பிரகாசாபோற்றி
மருளொழிப்பவனேபோற்றிமாசிலாமணியேபோற்றி
தெருளுறுமொன்றேபோற்றிதெய்வநாயகமேபோற்றி
இருளறுத்தென்னையாளு மிறைவனேபோற்றிபோற்றி-ஆக ௬௬ (௰)



வேறு,

வெண்பா.

அறிவுக்கறிவா யரும்பொருளதாகிக்
குறிவைத்திழுத்தகுருவே—முறியாகக்
கொண்டசிவமே கொடியேனெதிர்தோன்றிப்.
பண்டைவினையொழியப்பார் (௧)

எடுத்தசன்மங்களெத்தனையோவிணே
விடுத்துத்திரிந்தேன்விமலா-தொடுத்து
வருமென்றடுத்தேன்மகானுவேயென்னை
அருமைபுரிவாயறிந்து (௨)

உன்னையறியேனுனக்குவமைசொல்லறியேன்
என்னையறியேனிதனுக்கென்செய்கேன்-மன்னுமுனை
விட்டதுவுநானேதான்வீழுடலைநம்பிக்
கெட்டதுவுநானேநீகேள். (௩)

கெட்டாயினித்திரும்பாய் கேடிலான்பொற்பாதம்
விட்டாலினிப்பிழையாய்வேறுவாய்முட்டப்
பகற்பொழுதையல்லலென்னும்பாழ்நெஞ்சேயுன்றன்
விகற்பமெலாம்விட்டுவிடு. (௪)

அல்லற்படுமுடலின்மீதாசையதுபேய்போய்த்
தொல்லைப்பொருட்காகத்தோன்றுமிதை-வெல்லக்
குருபாதியல்லாற்குலவயத்தியாரே
அருள்பெருகச்செய்வாரறை (௫)

பொல்லாப்பிறவிதனக்கிடானபொய்யுலகை
வெல்லாவெறும்பாவியானேனே-நல்ல
குணமெனக்குன்பேரருளாற் கூடுமோஞான
உணர்வெனக்கிங்காமோவுரை, (௬)

நாடிப்படித்துணர்ந்துன் பான்மையறியாவேனுந்
தேடித்திரிந்ததனாற்றேறுவனோ-நாடிப்
பொருளுணர்க்கும்புண்ணியநின் பொன்னடிக்காளாகி
மருளறுத்துநிற்குமதேமாண்பு; (௭)

ஊரறியேன்பேரறியேனுற்றதுணையறியேன்
சீரறியேனுன்னடியைச்சேரறியே-னாரணியும்
முன்னவனேநின்னடியைமுற்றுணர்ந்தாயேனுக்
கின்னமுண்டோபொய்யாசையே (௮)

தற்பரமேசிற்பரமே தானுவேநீயற்றும்
அற்புதத்தையாரேயறிகுவார்-சொற்பொருளைக்
காட்டியெனையிழுத்துக்கையாலுமெய்யாலும்
நாட்டினாய்மோனநலம், (௯)

கன்னல்மொழிமடவார்கண்வலையிற்பட்டுன்னை
முன்னைவிட்டதல்லால் முழுதும்விட்டேன்-மன்னும்
வகையறியேனுன்னடியில் வாழவொட்டாதின்னும்
பகைசெயுமென்னெஞ்சமதுபார், (௰)

அறியாமைதன்னாலயலாகின்றுனைக்
குறியாப்பிடித்தறிவைக்கூடேன்-பொறியின்
வழியையடைத்தால் மனமுடக்கிநிற்கும்
அழுதனையருள்பெறுவேனுய்ந்து (௰௧)

உன்னுக்கருத்தறியேனேதமுணரயறியேன்
அன்னம்பசிக்கிலருந்துவேன் மன்னும்

பொருளாகுந்தற்பரனின் பூங்கழற்காளாமா
றருளாய்சிதம்பரத்துளாய (௰௨)

மாயாவுலகமதின் மன்னிப்பொருளிழந்து
காயாபுரிக்கோட்டையைக்கொண்டே தூயதாம்
உண்மைநிலைமறந்தேனுன்னடிமைப்பூசிக்கும்
வண்மையருள்வாய்மகிழ்ந்து (௰௩)

குருவுளத்திலுட்பொருளைக் கொள்ளையிட்டேனென்றன்
கருவழித்துமற்றதன்மேற் காமுற்-றுரையாவும்
இல்லாதெனவுரைத்தே யின்பமதுக்குடித்தேன்
எல்லாமெய்யல்லதிலை (௰௪)

சொற்பெரியதற்பொருளைத் தோற்றுப்பரிகொடுத்தே
அற்பவுடலைநிதமாதரித்ததுக்-கற்பாந்த
காலமிருக்குமெனக்காரணனேயெண்ணியுனை
ஞாலந்தனின்மறந்தேனான் (௰௫)

பூட்டிலாக்கோட்டையினுட்பொல்லாமணிவிளக்கை
காட்டும்வகைதேர்கிலாதாயானேன்-சேட்டையெலாம்
பாழாகவேண்டிப்பரகுருவேயென்னெஞ்சம்
தாழாதுன்பொன்னடியிற்றான் (௰௬)

புலையுங்கொலையும்பொருந்தவொழித்துன்
தலைநிற்கவென்றற்றமோ-மலையுமன
வாதனையைப்போக்கும்வகையெற்கருள்செய்குரு
நாதரபரிபூரணா; (௰௭)

தத்துவத்தைநன்றாய்த் தனித்துப்பிரித்துரைக்கும்
வித்தகனேயுன்னடிக்கீழ்வேவினேன்-மெய்த்த
உனக்கிணையாவாரொருவருண்டோவடியேன்
மனக்கவலைமாற்றுவதுன்மாண்பு (௰௮)

முன்னறியேன்பின்னறியேன் மூடனேயிவ்வுலகப்
பின்னலிலேகட்டுண்டு பேயானே-னின்னுமித்
தேகப்பொதிசுமக்கச்சிந்தைசெயேன்றெய்வமே
ஆகம்பிரித்திடக்கருள் (௰௯)

செத்தபிணத்தருகிற் சேர்ந்தினிமேற்சாம்பிணங்கள்
கத்திக்கதருங்கணங்கணக்கறியே-வித்தலத்தில்
சாகாதிருக்கவரஞ்சம்புவேகியளிக்கில்
ஆகாதோசொல்வாயமர்ந்து, (௨௰)

வேதப்பரிசடுத்த மெய்யனேவேலவனூர்
தாதையேயாயேற்குத்தாதையே-யோதும்
முடிவறியேனின்பாதமுன்டகந்தோறுன்றும்
படியுமறிருவருகண்பார், (௨௧)

சுந்தரற்குத்தூதுசென்ற சுந்தரனேநாயினேன்
பந்தமறுத்தல்வெகுபாரமோ-வுந்தன்
திருவடிக்கேயாளாகும் நினைனேற்கின்றும்
கருவிருப்பதாகாது காண் (௨௨)

துன்பந்துடைத்துத் துடிப்படக்கிமாறாத
இன்பந்தருமவனை யெய்துவாய்-வன்பிற்
கருணாதரம்மை யகமேயுலகை
அருவாயவமதிக்கலாம், (௨௩)

உன்னையொருபொருளாயுன்றுவாயுன்றுனே
மன்றுபொருள்வேறும்மதித்திடுவா-யென்னை
இருபொருளுமொன்றாயிருப்பையெனிநெஞ்சே
சரியாமிருவருக்குந்தான். (௨௪)

அத்தனடியையறுதினமுஞ்சிந்திக்கில்
சித்தஞ்சிவமாய்த்திகழுமே-முத்திப்
பாசுகமுமேவும்பரிவாகநெஞ்சே
குருவருளுமாகுங்குறி (௨௫)

கூற்றைக்கடக்கக்கருவருளேயன்றிவெறும்
காற்றைத்தடுக்கிற்களப்பரோ-கூற்று
வருவதற்குமுன்னரேவன்னெஞ்சேயிந்தப்
பருவுடலினாசைவிடப்பார் (௨௬)

பெரியோர் துணையாற்புறப்பிணிபோம்
விரியாமாணமொடுக்கும்வீணை-திரியாமல்
ஐயாவிமலாவரனேயவரேவல்
செய்யாமற்செய்யவருட்செய் (௨௭)

பாழுடலையாதரித்துப்பன்னாளுநெஞ்சமே
தாழுமவர்தம்மடியிற்றாழாமற்-சூழும்
துணையருளேயென்றெண்ணிச்சேர்வுறுதெந்தை
இணையடியைப்போற்றியிரு (௨௮)

உள்ளும்புறமுமொருங்குமயிலாப்பாவியேன்
கள்ளந்தவிர்த்தருணீகாட்டுவாய்-துள்ளி
எழுவேன்விழுவேனெழுந்துள்ளுருகி
அழுவேன்கருணாலயா (௨௯)

முப்பாழும்பாழாய்முதற்பாழ்வெறும்பாழாய்
அப்பாலுக்கப்பானின்றுடுவான் மெய்ப்பாகும்
ஒண்முகமைந்துள்ளானுகந்தவரை நெஞ்சமே
பண்முகத்திற்சேரான்மதி (௩௰)

காற்றுத்துருத்தியெனக்கோட்டுக்கடையனேன்
சோற்றுத்துருத்திசுமப்பேனோ-ஞூத்தைச்
ச்சடமகனேவெறுக்கித்தற்போதம்போக்கித்
திடமுற்றுத்தலுன்றன்செயல் (௩௧)

நில்லாதித்தேகநெடுநாளிருக்கவிச்சைச்
புல்லாதொழிந்தென் புலனெஞ்சே-வல்ல
குருவின்றிருவருளைக்கூடுவாயாகில்
அரியபதவிபெறலாம் (௩௨)

எப்போதுமுன்னையிடையறாதேயிருந்து
முப்போதும்பூசைசெயாமூடனே-னெப்போது
பூசிக்கவென்றுலென்பொல்லாதநெஞ்சநினை
நேசிப்பதில்லையையனே (௩௩)

கானனீராயுலகைக்கண்டுவக்கச்செய்தரிக்கட்
பானலாரிச்சைவெறும்பாழாக்கிக்-கோனேநீ
ஆட்டிடையன்போலவடியேனைமெய்த்தின்ப
வீட்டிலடைக்கவிரும்பு (௩௪)

உலகப்பேராசையொழியுமோநாயேற்
கிலகுமறுவுதயமாலேமா-யிலவுமது
பொய்யென்றறிந்துமறப்போக்காதிருந்திடுமின்
ஐயமனைத்தையையாவகற்று (௩௫)

விட்டபொருடனைமேவுவனோநாயடியேன்
பட்டப்பகலாப்பார்ப்பேனோவிட்ட
பொருளெனக்குக்கிட்டுமோபோதகுருவே
அருளெனக்கிங்காமோவறை (௩௬)

கண்ணையசைத்தெனக்குக்காட்டினான்கண்ணொளியே
விண்ணிலொளியாய்விளக்கினான்-விண்ணதனை
நாயேனும்பார்த்துமலகக்குரங்கைப்போலப்
பேயாயலைந்தேன்பிரிந்து (௩௭)

வந்தகுருபரனைமானிடனென்றெண்ணித்த
மந்திமதிக்கென்செய்கேன்வள்ளலே-முந்தி
யுரைக்குமொழிகேட்டுமுன்னாதிருந்தேன்
திருக்கருக்கவேண்டுந்தெரிந்து (௩௮)

அவனேசிவமுமவனேயருளும்
அவனேயுலகமனைத்து-மவனேதாம்
ஆனவரேசொன்னாலவரேகுருவாகும்
நானவனாய்வாழ்குவனென்று (௩௯)

தானந்தவமறியேன்றற்பரத்தைநாடறியேன்
ஞானமறியேனென்னைநானறியேன்-மோனம்
பெறுந்தன்மையுண்டோபிரானேபவமும்
அறுந்தன்மையுண்டோவறை — (௪௰)

இருளாமென் மெஞ்ஞலையிழுந்துவெளி பாக்கி
மருளாவகைபுரிந்தவாரே-தெருளாகச்
செய்யுங்குருவேசிறியேன்பிறவியொழிந்
துய்யும்படிநீயுரை (௪௧)

கூடிப்பிரிந்திருந்தகொள்கையறியாமல்
தேடித்திரிந்துதிகைத்தேனே-நாடியுனைப்
பார்க்கவருளிப்பரனேபிரிவறுத்துச்
சேர்க்கைநினதுசெயல் (௪௨

சாதனையில்லாமற் றாணிதனிற்பலவாம்
வாதனைகளாலேவருந்தினேன்-ஞாதா
யருமோபெருவாழ்வு மாறுதலின்பம்
தகுமோவறியேன்றனைய (௭௩)

அழியும்புவிவாழ்வை யாராய்ந்துபாரா
திழிவையுயர்வாக வெண்ணிக்கழியும்
உருவத்தைமெய்யென் றுகந்தாய்மனமே
பருவந்தளர்வதுநீ பார் ()

ஈட்டும்பொருளாசை யென்றுமொழியாது
நாட்டிலலைந்துழலு நாயானேன்-றேட்டம்
ஒழித்தற்கறிந்திலே னுத்தமனேயுண்மை
வழுத்தற்கருளுவதுன் மாண்பு (௪௫)

ஆனந்தமோனமறையுமோகத்தரும
தானந்தவமினிதிற்றங்குமோ-மோனக்
குருவேகருணைக் குறைப்பட்டாஞான
உருவேயடிமை யுளத்து (௪௬)

ஆக்கைநிலைமையறிபாமடமையேன்
நீக்கைநிலைமைதெளிவனோ-மோக்கம்
அருளும்பரகுருவேயன்பிலெனெஞ்சம்
தெருளும்படியருணீ செய் (௪௭)

௰க

பின்மையனே தன்மையனே சிற்பரனே தற்பரனே
நன்மையனே நிற்சத்திநாதனே-புன்மையேன்
பொல்லாமையைப் போக்கிநீகாத்தருள்வாய்
எல்லாமுனது செயலே (௪௮)

பத்திகுறைந்து பரதவிக்குமாயேனை
எத்தியிழுக்கிலஃதேற்காதோ-முத்தி
அடையும்படியருளு மத்தாவிமலா
உடையன்பவமொழியக்கரேன் (௪௯)

நித்தப்பிரகாசமாகுமோ சிற்பரனே
தத்தம்பொருளறியத்தான்வருமோ-நித்தனே
என்னறக்குணைச்சேர்ந் திரண்டற்றவானந்தத்
தோன்றிநிறைபேறாசையுளேன் (௫௰)

பொல்லாக்கொலையும்பலையுங்களவுமே
கல்லாப்பெருக்கயல ஞானேனே-கல்லாய்கேள்
கற்றுப்பொருளாகுக்காறுவேனென்னைமயல்
உற்றுற்றெருள்வருமோவோது (௫௧)

உனக்குமெனக்கு முறவாம்பரனே
சினக்கொடுமையாலுன்னைச்சேரேன்-மனக்கவலை
நீக்கியருளி நிமலனேமும்மலத்தைப்
போக்குமுபாயம் புகல் (௫௨)

அகந்தையபிமானமதமாசகுரோதம்
இகந்தவர்கள்சேர்வதுவேயின்ப-முகந்துநீ
இத்தனையுமாகாதென் றென்றுவையேநெஞ்சமே
அத்தன்கருணைநமக்காம் (௫௩)

கூடவறியேன் மணமறியேனின்புகழைப்
பாடவறியேன் பரவறியே-னாடி
நிமலநின்னன்பர் நிகழ்த்தும்பணிபுரிய
அமலனேகண்பார்த்தருள் (௫௪)

தோத்திரமாலை-முற்றிற்று-ஆக ௱௰௮



உ

சிவமயம்.

# எந்நாட் கண்ணி.



அத்திபுரிபோர்த்தருளு மண்ணலார்க்கென் குறையைப்
பத்திபுரிநெஞ்சே பகருநாளெந்நாளோ (௧)

அந்தித்திருநடனமாடுவான் பொன்னடியைச்
சந்தித்துநீபோய் தரிசிப்பதெந்நாளோ (௨)

அந்திபகலில்லா வகண்டபூரணவொளியைச்
சிந்தித்துநெஞ்சேநீசேருநாளெந்நாளோ (௩)

அங்கையினெல்லிக்கனிபோ லண்ணலருளுணர்ந்து
மங்கைநல்லார்மோகமயக்கொழிவதெந்நாளோ (௪)

ஆதியந்தமின்றியமர்ந்தவெளியில்
ஆதரவாய்நீபோ யமருநாளெந்நாளோ (௫)

ஆக்கைபிரியுமுனமண்ணலாரைந்தெழுத்தின்
தீக்கைபெற்றுநெஞ்சே திகழுநாளெந்நாளோ (௬)

எங்குமவனா யிருக்குமியல்பறிந்து
துங்கமுறுநெஞ்சே துதித்திடுவதெந்நாளோ (௭)

அடியாருளத்திலமருவான்பாதக்
குடியாயிருந்து குலவுநாளெந்நாளோ (௮)

இருளையறுத்தருளுமீசனார்தாளில்
மருளையறுத்துநெஞ்சே மன்னுநாளெந்நாளோ (௯)

அந்தக்கரணமறநோக்குவானடியே
சொந்தவாவெண்ணிச்சுகிக்குநாளெந்நாளோ (௰)

கொடுத்தவுடலதனைக்கொள்ளுவான்றனில்
விடுத்தகதைநெஞ்சேவிளம்புநாளெந்நாளோ (௰௧)

அகவிருளைநீக்கிப்பொருளத்தன்வரவுதனைச்
சுகலீலையாய்க்கண்டு துயரொழிப்பதெந்நாளோ (௰௨)

மதுரைவளநாட்டில் மண்சுமக்கநின்றோன்
பதமலரைநெஞ்சே நீபார்க்குநாளெந்நாளோ (௰௩)

எல்லாமுந்தானாயிருப்பானியல்பறிந்தென்
பொல்லாதநெஞ்சே புகழுநாளெந்நாளோ (௰௪)

காணாதகாட்சிபெறக்காணத்திராதரடி
பேணாதநெஞ்சே பிழைக்குநாளெந்நாளோ (௰௫)

விட்டுத்துறந்தனைத்தும் வேதாந்தமார்க்கமதைக்
கிட்டாதநெஞ்சேநின் கேடொழிவதெந்நாளோ (௰௬)

இரவுபகலில்லா விடமதனைக்கண்டு
பரிவுபெறுநெஞ்சே பரவுநாளெந்நாளோ (௰௭)

அக்கறுகொன்றைதும்பையம்புலியுஞ்சூடிநின்ற
சொக்கர்திருத்தாளிணையிற்றோயுநாளெந்நாளோ (௰௮)

அப்பணியுஞ்செஞ்சடையானையறுதற்கண்ணுடையான்
செப்பரியசெல்வவிடஞ் சேருநாளெந்நாளோ (௰௯)

அண்ணார்கொழுந்தேவ னரியசுடுகாட்டரசன்
சண்டனுக்குச்சண்டவிடஞ் சாருநாளெந்நாளோ (௨௰)

ஆச்சனவன்பிச்சனவனையனவனப்பனவன்
இச்சைதருமடியை யெய்துநாளெந்நாளோ (௨௧)

அத்தன்பெருந்துறைபா லழலேந்துங்கையுடையான்
சித்தனவனைபதத்திற்சேருநாளெந்நாளோ (௨௨)

அம்பொன்மலைவில்லானண்ணல்மலைமருகன்
செம்பதுமத்தாளிணையைச் சேர்ந்துருவதெந்நாளோ (௨௩)

ஆருமறியாமலெனையங்கையாற்சைகைசெய்த
சோணவனிடப்போய்த் தூங்குறுவெந்நாளோ (௨௪)

ஆங்கைமிகவாடி யங்கபங்கமானவெனைத்
தூக்கியெடுப்பானைத் துணையுறுநாளெந்நாளோ (௨௫)

ஆதிநடுவந்தமில்லா வண்ணலார்பொன்னடியில்
சாதிகுலந்தடியேன் சாருநாளெந்நாளோ (௨௬)

ஆடியதிற்றன்னிழலென் றுய்த்தறியாய்போல
வேடியினைத்தேடாருனையணைவதெந்நாளோ (௨௭

ஆலைக்கரும்பதுபோலன்னைகருக்குழியில்
சாலக்குலைவென் றளர்வறுப்பதெந்நாளோ (௨௮)

ஆகாப்பெரும்பாவியையனடிபாவி
சாகாக்கால்கண்டு தனித்துயிற்பதெந்நாளோ (௨௯)

தாபத்திரயந்தபிக்கச்சகிக்கவொணு
ஆபத்தகற்றியருள்பொழிவதெந்நாளோ (௩௰)

இந்திரற்குமெட்டாவிணையடியென்சென்னிவைத்த
சுந்தரன்சீர்பாடித் துகளறுப்பதெந்நாளோ (௩௧)

இருக்குமுதனல்வேதமின்மறியாத
திருக்கழலைக்கண்டென்றிருக்கறுப்பதெந்நாளோ (௩௨)

இருந்துவினைப்பேனிருளறுக்கப்பூந்தாள்
வருந்தவந்ததேசிகனை வாழ்த்திநிற்பதெந்நாளோ (௩௩)

கைகாட்டியென்னையவன் காதல்கொளவிசைத்து
மெய்காட்டுவானடியைமேவுநாளெந்நாளோ (௩௪)

கண்மூடிக்கண்டிறந்தக்கடுவெளியுளானிடம்போய்
விண்மூடிஞானவிண்ணில் மேவுநாளெந்நாளோ (௩௫)

கண்மாயைக்காட்டிக் கடியமயல்பூட்டும்
பெண்மாயைவிட்டிப்பிலமூழ்குநாளெந்நாளோ (௩௬)

சத்தனவன் சித்தவனன் சச்சிதானந்தனவன்
முத்தனவனென்று முறையிடுவதெந்நாளோ (௩௭)

ஊருமிலான் பேருமிலா னுற்றாருறவுமிலான்
ஆருமிலானென்றே யணையுமாறெந்நாளோ (௩௮)

எங்குநிறைந்தபரி பூரணனைக்கண்டேத்தி
அங்கங்குழைந்துபணிந்தப்பற்றிருப்பதெந்நாளோ (௩௯)

ஆலின்குளாவியாமத்தன்றிருவடியைப்
பாவித்துநின்றுபுவமொழிப்பதெந்நாளோ (௪௰)

வாயைத்திறவா மவுனகுருபரனை
நேயக்கவலைவிட்டேயுற்றிருப்பதெந்நாளோ (௪௧)

பட்டப்பகலிற் பரம்பொருளைப்பாழ்நெஞ்சால்
விட்டேனதவிடம்போயமேவுமாறெந்நாளோ (௪௨)

பாடுமவனாருத்திற் பாதமதைத்தூக்கிநின்
றாடுமவன்கருணைக்கண்புகுவதெந்நாளோ (௪௩)

ஒன்றுமிரண்டுமொழித்தென்றுமிரண்டுமலா
தொன்றுமிருந்தவொன்றை யுற்றறிவதெந்நாளோ (௪௪)

அஞ்சுமிரண்டகற்றியானந்தவெள்ளத்தே
துஞ்சியிருந்து சுகம்பெறுவதெந்நாளோ (௪௫)

கையசைத்துக்காட்டியென்றன்கட்டழியப்பார்த்தானை
மெய்யசையாதற்றிருந்து மேவுமாறெந்நாளோ (௪௬

காலைப்பிடித்திழுத்துக்கண்டுசோராமல்
மூலத்தைக்கண்டு முடிவறிவதெந்நாளோ (௪௭)

அருட்சத்திதானே யருட்குருவாய்வந்து
விருப்புற்றதாயேற்கு வீடளிப்பதெந்நாளோ (௪௮)

கூடாமற்கூடியென்றன்கூட்டமறுப்பானை
நாடாமனாடிநலம்பெறுவதெந்நாளோ (௪௯)

சுழிமுனையென்றேயறிஞர் சொற்றபொருட்டெளிந்து
பழுதுறுவாயுலைவிடுத்துப் பரமாவதெந்நாளோ (ருய)

தூண்டியிருளறுத்துத் தூண்டாவிளக்கேற்றி
நீண்டமயக்கொழிந்து நின்றிடுவதெந்நாளோ (ருக)

என்னைப்பொருளாக்கி யினைப்பொருளளித்தோன்
சொன்னவகையே சுகங்காண்பதெந்நாளோ (ருஉ)

சச்சிதானந்தமது தானென்றுணர்வால்
அச்சிதாகாச மறிந்தணைவதெந்நாளோ (ருங)

மாயைக்குலமாய்க் கவர்ந்தென்னகத்திருக்கும்
தாயையறிந்து தரிசிப்பதெந்நாளோ (ருச)

மாயைக்களைகளைந்து மாமணிபோலாவதற்குக்
காயப்பழக்கங் கடிந்தொழிப்பதெந்நாளோ (ருரு)

அறிவுக்கறிவா யகண்டவொளியாகி
செறிவொத்திருக்கு நிலையறிவதெந்நாளோ (ருசு)

பஞ்சாங்கஞ்சொல்லிப் படித்துமயலுற்றேனை
அஞ்சாதேயென்றுய்யி லாரவைப்பதெந்நாளோ (ருஎ)

வாக்கியத்தைநான்கு வகையாய்ப்பிரித்துரைத்துத்
தாக்குமயலறுத்தோன் றாளணைவதெந்நாளோ (ருஅ)

தத்துவத்தின்பூட்டறுத்துத் தானேதானாயிருக்
தத்துவிதானந்த மடையுநாளெந்நாளோ (ருகூ)

வீட்டிருளைப்போக்கி வெளியிலேயொளியாகுமுனை
நாட்டிலறிந்தருளை நண்ணுநாளெந்நாளோ (கூய)

வண்ணாத்தியம்மாள் மலரடிக்கேயாசைகொண்
டுண்ணாட்டிப்பார்த்தென் றுயரழிவதெந்நாளோ (கூக)

சிவசங்கரநாதச்செல்வதிருப்பணியை
அவலமறப்புரிந்திங் காட்படுவதெந்நாளோ (கூஉ)

அந்தமாந்தன்னடிக்கீழ யாளாக்குந்தேசிகனைச்
சொந்தமாய்ப்பாடித் துரிசறுப்பதெந்நாளோ (௰௬)

எந்நாட்கண்ணி-முற்றும்

ஆக-௱௮௰,





# பூங்குயிற்கண்ணி.

அன்பருளத்திருக்கு மாகந்நாயகனை
என்புருகிநாயடியே னென்றனைவேன் பூங்குயிலே (௧)

காட்டுக்கதிகாரி ஞானம்பிகைக்கொழுநன்
ஆட்டைத்தரிசித்தமர்வேனோபூங்குயிலே (௨)

சிந்தைகலக்கத்தெளியமொழிந்ததனை
எந்தன்குறைதீரவெய்துவனோபூங்குயிலே (௩)

கொட்டாவிகொண்டுகுறுகுறுத்துப்பாழுடலை
விட்டேகுமுன்பரனைமேவுவனோபூங்குயிலே (௪)

புல்லறிவினாலே பொருண்மறந்தபாவியேன்
நல்லறிவுபெற்றருளை நாடுவனோபூங்குயிலே (௫)

சுட்டறுதானந்தவெள்ளந் தோய்ந்துதனைக்காடிநிற்க
விட்டகுறைவந்தெனக்கு மேவுமோபூங்குயிலே (௬)

சாதகத்தைதக்கையகன்று சாட்சியாய்நானிருந்து
போதகனார்பொன்னடியைப்புல்லுவனோபூங்குயிலே (௭)

உலகஞ்சிரிக்கவுந்துவிகூர்ந்
திலகுமறிவா யிருப்பேனோபூங்குயிலே (௮)

காட்டுக்கதிகாரிவன்னைநிகன்றருள்பணிந்தும்
நாட்டார்நகைப்பதற்கு நாணுவனோபூங்குயிலே (௯)

கூட்டைச்சுமந்து குணம்மழிந்தானேன்
வீட்டைப்பொருந்திமகிழ் மீறுவனோபூங்குயிலே (௰)

கங்கைச்சடையான் கரிசிலரன்பொற்பதத்தை
அங்கபங்கமாமுன் னணைகுவனோபூங்குயிலே (௰௧)

கோலாலமாகிக் குரைகடல்வாயன்றுதித்த
ஆலாலமுண்டா னருள்வருமோபூங்குயிலே (௰௨)

அஞ்சிவிரண்டையொழித் தஞ்சுருவுமோருருவாய்த்
துஞ்சியவன்சேவடியிற் றூக்குவனோபூங்குயிலே (௰௩)

தொண்டர்பணித்தேத்துந் தூயசிற்றம்பலற்கே
விண்டவனைச்சேர விளம்புவாய்பூங்குயிலே (௰௪)

நந்திகுருபரனைநாட்டமுற்றார்தம்மடியை
இந்தவுடல்வீழுமுன்மெய்துவனோபூங்குயிலே (௰௫)

விசுவேசர்சந்நிதியில்வாழ்ந்தபெரியோர்பதத்தில்
அசையாதிருந்தடியேனார்வேனோபூங்குயிலே (௰௬)

தக்ஷிணாமூர்த்திபதந்தாழுமவர்தாட்கமலம்
பக்ஷமாய்க்கண்டுபணிவேனோபூங்குயிலே (௰௭)

வாதவூராளியெனுமாணிக்கவாசகரை
ஆதரவாயுள்ளத்தணைகுவெனோபூங்குயிலே (௰௮)

திருவள்ளுவனார்திருவடியைமாறாக்
கருவிள்ளுமாறகத்திற்காண்பேனோபூங்குயிலே (௰௯)

வீறுசாரங்கனடிமேவுமவருள்ளுடையும்
ஆறங்கலிங்க மணைவனோபூங்குயிலே (௨௰)

சிற்றம்பலநாடிச் சீகாழி யூரமர்ந்தான்
அத்தன்கருணைவெள்ளத்தாழ்வேனோபூங்குயிலே (௨௧)

பட்டினத்துப்பிள்ளையார் பத்திரகிரிவேந்தர்
மட்டவிழும்பொற்றாள் மருவுவனோபூங்குயிலே (௨௨)

கண்ணுடையவள்ளலார்க்கன்புவைத்தகண்ணாளர்
நண்ணுபதஞ்சிறியேனணுகுவனோபூங்குயிலே (௨௩)

நிசசொரூபானந்தநிமலகுருபாதத்
தசையாதிருக்குமருள்வருமோபூங்குயிலே (௨௪)

தத்துவராயர்சரணடைந்தநல்லோரை
நித்தந்துதித்திருவிணங்குவனோபூங்குயிலே (௨௫)

திருநீலகண்டருஞ்சேர்த்தவயிராகத்
தருமையினைநாளுமறிவேனோபூங்குயிலே (௨௬)

திருநாவைப்போகர்திருவடிக்கேயாளாம்
பருவமீதென்றுபதைப்பேனோபூங்குயிலே (௨௭)

குணசாமிவாயருள்கொள்ளைகொண்டார்தம்மை
அகமுருகிமெய்சார்ந்தணைவேனோபூங்குயிலே (௨௮)

எங்கள்குருநமசிவாயரிருபாதம்
துங்கமாய்க்கண்டுதொழுவேனோபூங்குயிலே (௨௯)

சுபாத்திரமூர்த்திகாக்ஷிபெற்றார்தம்போல்
அநேகரோட்டாயேற்கவையுமோபூங்குயிலே (௩௰)

மவுனகுருநாதன்மலரடியைப்போற்றும்
தவமுனிவர்பாதந்தலைவருமோபூங்குயிலே (௩௧)

பாலையானந்தவடிபாடுவார்பொன்னடிக்கே
ஆலயமாயென்னெஞ்சலையுமோபூங்குயிலே (௩௨)

சிவப்பிரகாசன்றிருவடியைப்போற்றி
அவப்பிரயாசமகற்றுவனோபூங்குயிலே (௩௩)

ஞானிதங்காளத்திமுத்தன்றூயவடிக்கென்றும்
ஆளாகிநாளுமடைவேனோபூங்குயிலே (௩௪)

சீர்மேவுசாந்தலிங்கதேசிகரானோரை
ஆராமையாய்க்கண்டணைவேனோபூங்குயிலே (௩௫)

பிறவிமாதேவனடிபாடுமடியாரைத்
தொழுதுமனமுருகித் தோய்வேனோபூங்குயிலே (௩௬)

கருணைப்பிரகாசக்கண்மணிபொற்பாதத்
தருமையாயென்னெஞ்சமையுமோபூங்குயிலே (௩௭)

குருவாயென்னையடிமைகொள்குமாரதேவன்
அரிதாயென்னெஞ்சிலமர்வானோபூங்குயிலே (௩௮)

பொரூர்ச்சிதம்பரனார்பொன்னடியென்புன்றலைமேல்
பேராதிருக்கப்பெறுவேனோபூங்குயிலே (௩௯)

அருணாசலதேவர்க் கன்புசெய்துவாழும்
கருணாகடாக்ஷமதுகாணுமோபூங்குயிலே (௪0)

ஆறுமுகதேவனடிக்கன்புபுரிந்துநெஞ்சம்
தேறுவதுமுண்டோநீசெப்புவாய்பூங்குயிலே (௪௧)

பாதிரிஞானம்பாவின்பங்கயபொற்பாதமே
ஆதரவாயெண்ணியணைவேனோபூங்குயிலே (௪௨)

விருத்தகிரிச்சிதம்பரேயனார்பொன்றாள்
வருத்தமறக்கண்டுமகிழ்வேனோபூங்குயிலே (௪௩)

தாயுமானாரடியிற்றாழுமவர்தம்மடிக்கீழ்
ஓயாதநெஞ்சகமுமோய்ந்துறுமோபூங்குயிலே (௪௪)

கூவரக்கத்தேசிகனார்கூறுங்கருத்ததனை
ஆவரவென்றென்னுளறிவேனோபூங்குயிலே (௪௫)

சின்முத்திராங்குசக்கொள்தேசிகன்வேலாயுதன்றாள்
நன்முத்திவாழ்வுபெறநாடுவேனோபூங்குயிலே (௪௬)

குருவாகவந்தகுழந்தைவேலையன்
திருவாய்மொழியென்னுட்டேருவனோபூங்குயிலே (௪௭)

பூங்குயிற்கண்ணி-முற்றும்.

ஆக-௨௨௭.



# என்னேயோ வென்கண்ணி.



எல்லாநீயென்றுணர்த்த வென்குருவேநின்னருளால்
எல்லாநானென வியல்புதானென்னேயோ (௧)

இருட்கடலில்மூழ்குமெனையீர்த்துவெளியாக்கி
அருட்கடலில்மூழ்கவைத்தவாச்சரியமென்னேயோ (௨)

பொய்புலனின்மெய்யாய்ப்புகுந்தவெனைத்தூக்கி
உய்யவடிக்கீழ்வைத்தவாச்சரியமென்னேயோ (௩)

விடுமனைவிமக்கள்மெய்யென்றிருப்பேனை
நடுமலைக்கீழாரவைத்ததென்னேயோ (௪)

திருவடியைநாடாச்சிறியேனையன்பால்
அருகிலழைத்தவதிசயந்தானென்னேயோ (௫)

பத்திநெறியில்லேன்பரஞானமில்லேனை
அத்தனழைத்திட்டவதிசயந்தானென்னேயோ (௬)

கறுத்தமலமாயைவலிகன்மைநிர்தோன்றாமல்
அறுத்தெனையாட்கொண்டவதிசயந்தானென்னேயோ (௭)

மெய்யர்திருவடியின்மேவாதநாயேனுக்
குய்யவருளுமதிசயந்தானென்னேயோ (௮)

பவமதனுக்காளாகிப்பாழாக்குநெஞ்சந்
தவமதனைச்செற்றவதிசயந்தானென்னேயோ (௯)

என்னேயோவென்கண்ணி-முற்றும்.

ஆக-௨௩௯.







# ஆனந்தக் களிப்பு.



ஆனந்தம் ஆனந்தம் தானே - பரம்
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் தானே

வானோர்க்கரிதாம்பொருளே-என்னை-மலரடிக்காட்செயு மாறுளத் தெண்ணி-தானேகுருவுருக்கொண்டு-இந்த - தரணியில்வந்து சமைந்தது தோழி-ஆனந்தம், (௧)

அந்தக்குருமூர்த்திதன்னை-நானும்-அன்பாற்பணிந்தஞ்சலியாகிநின்றேன்-சொந்தமாயென்புன்றலைமேல்-பதம்-சூட்டியொருமொழியூட்டினான் தோழி-ஆனந்தம், (௨)

ஊட்டுங்குருசந்நிதியில்-என்றன்-உடல்பொருளாவியொருமூன்று மீந்தேன்-காட்டுமுன்னையறியென்றான்-அவன்- காருண்யனென்று கருதினேன்தோழி-ஆனந்தம், (௩)

ஒல்லையிலவன்பாதந்தன்னை-பணிந் - தொடுங்கிநடுங்கினே-னானொன்று கேட்டேன் எல்லாநீயே என்றுரைத்தான் நானெப்படியெல்லா மென்றேத்தினேன்தோழி-ஆனந்தம் (௪)

உனக்கென்னேயெதிர்நிற்பதென்றான் - அந்த-உளவறியா துலகமதென்றேன்-கனமாமுலகமதெங்கே-அது - கண்டுரைசெய்யென்று சொன்னான்டிதோழி-ஆனந்தம், (௫)

எந்தவினைவினிலென்றேன்-நன்றாய்-எண்ணியுலகவுருவத்தைநீக்கி- அந்த நினைவைப்பாரென்றான்-அதை- அறிந்தேனென்றுரை செய்தேனடி தோழி-ஆனந்தம். (௬)

அந்நினைவையல்லாமல்-உல-காதியுருவமதெங்குளதென்றான்-இந்த வுருவு நீங்கிலென்றேன்-ஆகில்-இந்தவுருவமுமவமெங்குளதென்று-ஆ()

சந்தவினைவினிலாகும் என்றே - வந்திச்சொன்னேனஃதெங்குள தென்றான்-எந்தவிடந்தனிற்றுலே-அன்றி-எங்குநான்கண்டலனென்றேனடிதோழி-ஆனந்தம். (௮)

ஆதியாமுன்றன்வினைவை- நன்றாய் - அகற்றிப்பின்னுன்னைப்பாரென்று மொழிந்தான் சோதியேநானென்றுரைத்தேன் - அப்பா - சொன்ன சொல்லேயுண்மையென்றுரைத்தானடி-ஆனந்தம் (௯

கண்டவிடத்தினிற்காட்சி-அது-கண்டுணர்செய்யென்று பின்னுமுரைத்தான்-எண்டிசையெல்லாந்துதிக்கும்- உன்றன் - இணையடியலதொன்றுமிலென்றேன்தோழி-ஆனந்தம், (௰)

உற்றதுகூறென்றுசொன்னான்-சுவாமி - ஒத்தவிடத்தினி னித்திரைசெய்தேன் சத்தியமாயென்றுநவஞ்-சித்து - தானேயென்றுறுதியாய்ச் சாற்றினேன்தோழி-ஆனந்தம் (௰௧)

சித்தென்றுசொன்னசொற்கொண்டே-இன்னும்-சித்தனைக்கெட்டாச் சிவத்தையறிந்து-முற்றுமுணர்ந்தருளென்றான்-நானும் - முதலிலாவுன்னைப்பார்த்தேனடிதோழி-ஆனந்தம் (௰௨)

பார்த்தவிடத்தினிலெங்கும்-நல்ல- பரவெளியாகிப் பரசுகந்தானே கோத்துப்பிடித்திழுத்தென்னை - அது-கூட்டி முடித்ததைக் கூறிலேன் தோழி-ஆனந்தம் (௰௩)

எல்லாமழிந்ததுமில்லை-நான்-எல்லையிலாவொளிபெற்றதுமில்லை - பொல்லாமலவிளக்காகி எங்கும்-பூரணமானநான்பொய்யேடிதோழி- ஆனந்தம், (௰௪)

சத்துச்சித்தானந்தமெய்யே-அந்தத் - தன்மையறிந்துநான்சார்ந்ததும்பொய்யே-சித்துவிலாசமுமெய்யே-அந்தச்-சித்தையறிந்தான்பொய்யேனான்தோழி-ஆனந்தம், (௰௫)

இல்லிருந்தநானே-என்னை-இழுத்துவெளியிலில்விட்டதுநானே-வல்லவனானநானே வல்ல-வன்றன்கருணையால்வந்தளித்தாண்டி-ஆனந்தம் (௰௬)

நீயுமறிவாயேமானே-ஞான-நிதியைக்கைவிட்டுநிலையாதவாழ்வில்- மாயமனத்தைப்பிரித்தே-ஐயன்-மலரடிசேர்த்ததுமானந்தந்தோழி-ஆனந்தம் (௰௭)

வாழைமடலுரித்தப்பால்-நல்லவளமானதண்டையுக்கண்டதுபோலப்-பழமுடலைப்பிரித்தே-அதைப்-பார்க்கச்சொன்னான்பற்றிப் பார்த்தேகண்டிதோழி-ஆனந்தம், (௰௮)

பார்த்தவிடமெல்லாம்பாழே-அதிற்-பாககமொன்றுமேமேலாருமந்தக்கூத்தைநான்பார்த்ததுமில்லை-அந்தக் - குறிசொல்லவெவராலுங் கூடுமோதோழி-ஆனந்தம், (௰௯)

நானென்றுநீயென்றுமுண்டோ-இங்கே -நடுவேயிருந்தமறைப்பையகற்றில்-நீநானென்றெண்ணும்விகற்பம் - நீங்கி-யானந்தமாகமகிழ்ந்ததுதோழிஆனந்தம், (உ௰)

உடலென்றுமுயிரொன்றுமுண்டோ-இந்த-உடலைப்பிரித்துநானுங்கண்டிப் பார்க்கில்-மலடவிழ்பாதமேயல்லால் - அங்கே-மற்றொன்றுங்கண்டுமதித்திலேன்தோழி-ஆனந்த; (உக)

ஜென்மசாபல்யமானேன் யார்க்கும்-சிந்தனைக்கெட்டாச்சிவரூபமானேன்-தன்மயமாகத்திகழ்ந்தேன்-எங்கும் - தடையற்றவானந்தானானேன்தோழி-ஆனந்தம் (உஉ)

காடுஞ்செடியுமலையும் - கூடு - காடுமருமலர்ச்சோலையுக்குன்றும்-நாடுநாமும்விடும்-எங்கும்-நாடி லென்னையன்றிவேறில்லைதோழி-ஆனந் (உ௩)

பட்டப்பகலிலேக்கோட்டை-தன்னைப் - பார்த்தேகொடுத்துப்பரவெளியா
னேன்-விட்டவிடத்தையடுத்தே - நான்-மேவியிருந்தபோதானந்தந்
தோழி-ஆனந்தம், (௨௪)

குருவைப்பணியாதிருந்தும் - ஞானக்-கொடிபோட்டிருந்தேனிக்குவலயத்
தன்னில்-அருவுருவாகுமென்னையன்-அதை-அறுத்துக்கைகாட்டவ
ருளினான்றோழி-ஆனந்தம். (௨௫



ஆனந்தக்களிப்பு-முற்றும்-ஆக-௨௬௧;

தோத்திரமாலைமுற்றிற்று



